REG NO. M. 1823. 16 பக்கங்கள். KUMARAN WEEKLY

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5–0–0
ஆறு மாதம் 3–0–0
ஸிலோன், ரூ. 6–0–0
பர்மா மலாய் முதலிய வெளிநாடு ஒரு1-க்கு ரூ. 7–0–0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2–0–0
வியாபார சம்பந்தமானது ரூ. 0–12–0
ஒப்பந்த விளம்பரத்திற்கு மானேஜருக்கு எழுதவும்.

(மாதப்பதிப்பும் சேர்ந்தது.)

வியாழன் தோறும் வெளிவரும்.

PUBLISHED EVERY THURSDAY.

ஆசிரியர்:— சொ. முருகப்பா.

ஆரம் 14. காரைக்குடி, ஈஸ்வர-ஹூ ஆனிமீ 11உ (24—6—37.) முத்து 44.

# வைசிராய் பேசுகிறார்

## உறுதிமொழி அளிப்பது ஆட்சேபகரமானது!

## ஆனால் தினசரி வேலைகளில் கவர்னர் நிச்சயமாகத் தலையிடமாட்டார்

பம்பாய் ஜூன் 21.

இந்தியாவிற்கு ராஜப்பிரதிநிதி லார்டு லின்லித்தோ விடுத்திருக்கும் செய்தியின் சாரம் வருமாறு:—

சட்டசபைகளில் மெஜாரிட்டி பெற்றிருக்கும் கட்சியார் மந்திரிசபை யேற்க மறுத்ததாலேற்பட்ட நிலைமையைப்பற்றி நான் இதுவரை பகிரங்கமாக எதுவும் பேசவில்லை. நீண்ட ஆலோசனையின்பேரிலேயே நான் அவ்வாறு பேசாதிருந்தேன். திட்டம், அதன் நோக்கம், புதிய அரசியல் அமைப்பு ஆகியவற்றை உத்தேசிக்கும்போது மெஜாரிட்டிக் கட்சியார் பதவியேற்க மறுத்துள்ள மாகாணங்களில், கவர்னரும் ஷை கட்சித் தலைவர்களுமே இதைப்பற்றிப் பேசித் தீர்க்கவேண்டுமென்பது புலனாகும். என் மனோபாவமும், இந்தியா மந்திரி, கவர்னர்கள் ஆகியோரின் மனோபாவமும் பதவியேற்புப் பிரச்னையில் ஒன்றுதான். கவர்னர் மந்திரிகள் உறவு, மந்திரிகளின் சாதாரண நிர்வாக அதிகாரத்தில் கவர்னர் தலையீடு முதலியவை சம்பந்தமாக மூன்று மாதங்களுக்கு முன்பு விசேஷ தப்பபிப்பிராயமும், பயமும் நிலவியிருந்தது. பொதுக்கூட்டங்கள், பத்திரிகைகள், பார்லிமெண்டு முதலியவற்றில் வெளியிடப்பட்ட அறிக்கைகள் மூலம் அத்தகைய தப்பபிப்பிராயங்கள் விசேஷமாக மறைந்துவிட்டது பற்றி மகிழ்கிறேன்.

ஆறு மாகாணங்களில் சட்ட சபை மெஜாரிட்டி பெற்ற ஒரு கட்சியார் கவர்னர் குறிப்பிட்ட சில உறுதி மொழிகளை அளித்தாலன்றி பதவி வகிப்பது புத்திசாலித்தனம் அல்லவென்று முடிவு செய்தனர். உறுதிமொழி கொடுப்பதென்பது சட்டப்பிரகாரம் ஆட்சேபகரமானது என்பது ஒருபுறமிருக்க அத்தகைய உறுதிமொழியை அளித்தால்தான் புது அரசியலைப் பக்குவமாக நடத்தலாம் என்ற அவசியமில்லை யென்பதும் இந்த மூன்றுமாத சாவகாசத்தில் தெரிந்துவிட்டது. ஒவ்வொரு மாகாணத்திலும் மந்திரிகள் உத்யோககோஷ்டியின் ஒத்துழைப்பினாலும், உதவியாலும் தங்கள் அன்றாட நிர்வாகத்தில் கவர்னர்களால் எத்தகைய தடையும் நேரவில்லை யென்பதைத் தெரிந்துகொண்டார்கள். தங்களுக்குள்ள விசேஷ அதிகாரத்தைக் கொண்டு மந்திரிகளின் செயல்களில் தலையிடுவார்களென்ற கவலைக்குக் காரணமில்லையானாலும் நான் நிச்சயமாகக் கூறுகிறேன் கவர்னர்கள் குறுக்கிடுவதற்கு நியாயமே இல்லை.

பார்லிமெண்டு எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அதிகமான கவலை எடுத்துக்கொண்டு தேர்ந்தெடுக்கப்பட்ட மந்திரிகளுக்கு உண்மையான அதிகாரங்கள் இருக்கவேண்டுமென்று விசேஷமாகப் பாடுபட்டது. புதிய அரசியல் திட்டத்தையும் ஆக்ஞா பத்திரத்தையும் கவனித்தால் பார்லிமெண்டின் அபிப்பிராயம் இன்னதென்று விளங்கிவிடும். பார்லிமெண்டார் அந்த அபிப்பிராயத்தை அனுசரித்தே கவர்னர்களுக்குக் கட்டளை பிறப்பித்திருக்கிறார்கள்.

### கவர்னரின் விசேஷாதிகாரம்

மாகாண சுய ஆட்சியில் மந்திரிகளுடைய ஆதிக்கத்திற்குட்பட்ட எல்லா விஷயங்களிலும், (சிறு பான்மையோர், உத்தியோகஸ்தர் நிலைமை இவை உள்பட) கவர்னர் தமது மந்திரிகளின் ஆலோசனைக் கிணங்கவே தமது அதிகாரங்களைச் சாதாரணமாக உபயோகிக்க வேண்டுமென்றும், மந்திரிகள் பார்லிமெண்டிற்குப் பொறுப்பாயில்லாமல் மாகாண சட்டசபைக்கே பொறுப்பாய் இருப்பார்களென்றும், அந்த தஸ்தாவேஜுகளில் சந்தேகமறச் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த விதி சம்பந்தப்பட்ட நிபந்தனைகள் குறிப்பிட்ட சிலவிஷயங்களையும், தெளிவாக வரையறுக்கப்பட்ட விஷயங்களையும் பற்றியவையாகும். இவற்றுள் மிக முக்கியமானவற்றிற்கு விசேஷப் பொறுப்புகள் என்று பெயர். இந்த விசேஷப் பொறுப்புகளிலும் மிக்க முக்கியமான அம்சம் யாதெனில் மாகாணத்திலாவது அதன் எந்தப் பகுதியிலாவது சமாதானம் அன்றி அமைதிக்குப் பெரும் ஆபத்து நேரிடுவதைத் தடுப்பது, சிறுபான்மை வகுப்பினரின் நியாயமான உரிமைகளைப் பாதுகாப்பது, ஊழிய வர்க்கத்தினருக்கு அவர்களது உரிமைகள் கிடைக்குமாறு செய்வது முதலியவையாகும். விசேஷப் பொறுப்புக்கள் எதுவும் பார்லிமெண்டினால் நீர்க்காலோசனை செய்யப்படாமல் கவர்னர் மீது சுமத்தப்படவில்லை. தகுந்தவர்கள் கோரிய நியாயமான கோரிக்கைகளுக் கிணங்கவே ஒவ்வொரு விசேஷப் பொறுப்பும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

மாகாண நிர்வாகத்தில் தமது உசிதப்படியெல்லாம் தலையிடுவதற்கு கவர்னர் சட்ட பூர்வமான உரிமை பெற்றிருப்பதாகக் கூறப்படுவதற்கு ஆதாரமில்லை. அந்த விசேஷப் பொறுப்புகளின் எல்லைகள் எவ்வளவுக் கெவ்வளவு குறைக்க முடியுமோ அவ்வளவுக் கவ்வளவு குறைக்கப்பட்டிருக்கின்றன. மந்திரிகளின் பொறுப்புக் குட்பட்ட இதர விஷயங்களில் மந்திரிகளின் ஆலோசனையில் கவர்னருக்கு பூரண திருப்தி ஏற்படா விட்டால் கூட மந்திரிகளின் ஆலோசனைப்படியே நடக்கக் கடமைப்பட்டிருக்கிறார்.

2 தரப்பினரும் நல்லெண்ணத்துடனும் மாகாண நன்மைக்காகவும் புதிய அரசியலை அமுல் நடத்தவேண்டுமென்ற விருப்பத்துடன் வேலை செய்தால் விசேஷப் பொறுப்புகளால் எதிர்பார்க்கக்கூடிய கஷ்டங்களுக்கு இடமே இல்லாமற் போய்விடும். சென்ற 3 மாதங்களில் இந்தியாவின் ஒவ்வொரு மாகாணத்திலும் நிகழ்ந்த சம்பவங்களே இதனை நன்றாக விளக்கும்.

### மந்திரிகளுடன் அபிப்பிராயபேதம்

கவர்னர் தமது சொந்த அறிவை உபயோகிக்கவேண்டிய சந்தர்ப்பத்தில் கவர்னருக்கும் மந்திரிகளுக்கும் அபிப்பிராய பேதமேற்பட்டால் பொறுப்புள்ள மந்திரி சபை கவர்னரது முடிவை ஏற்றுக்கொள்ளாவிடினும் ராஜீநாமாச் செய்யும் உத்தேசத்தைக் கொள்ளாதிருக்கலாம். கவர்னருடைய விசேஷப் பொறுப்புகள் உள்பட மந்திரிகளின் ஆதிக்கத்திற்குட்பட்ட நிர்வாக கவர்மெண்ட் முழுவதிலும் ஆலோசனை கூற மந்திரிகள் கடமைப்பட்டிருக்கிறார்களென்று நான் ஏற்கனவே கூறியிருக்கிறேன். மந்திரிகள் விடுக்கும் ஆலோசனை

(12-ம் பக்கம் பார்க்க)

## சாரங்கோட்டையில் படுகொலை

### ஹரிஜன் பாட்டுப்பாடிச் சென்றனும்!

இராமநாதபுரம் ஜில்லா கல்லுப்பட்டியை அடுத்துள்ள சாரங்கோட்டை என்ற கிராமத்தில் ஜூன் 15ந் தேதியன்று குறுந்தம்பட்டைச் சேர்ந்த அழகன் என்னும் ஹரிஜன் சாரங்கோட்டை வழியாக வேறொரு கிராமத்திற்குச் சென்றுகொண்டிருக்கையில் வழி நெடுக "தீண்டக்கூடாதாம் சாமி தொடக் கூடாதாம்" என்ற பாட்டைப் பாடிக்கொண்டே போனன். இப் பாட்டு ஜாதி ஹிந்துக்களுக்குக் கோபமூட்டுமென்று ஒரு ஜாதி ஹிந்து உறுமினராம். அழகன் அதை லட்சியஞ் செய்யாமல் பாடிக்கொண்டே போனன். அவனோடு கூட வந்த நண்பன், அவன் குடித்திருப்பதாகவும், அதனல்தான் அவ்வாறு பாடுகிருனென்றும் கூறினன். இதற்குள் ஜாதி இந்துக்கள் பலர் கூடிவிட்டனர். அவரவர்கள் கையிலிருந்த கம்பு, அரிவாள் முதலியவற்றைக் கொண்டு அடித்தும், வெட்டியும் அந்த ஹரிஜன் அங்கேயே உயிரிழக்கும்படி செய்துவிட்டனர்.

போலீசாருக்கு விவரம் தெரிந்து வந்து பிரேதத்தை விசாரணைக்கு அனுப்பினர்.

ஊரிலிருந்த யாவரும் வெளியேறி விட்டனர்.

மூன்று ஜாதி இந்துக்கள் கைதிசெய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

---

### சென்னை சர்க்காரின் பிரசாரக் கண்டனம்

அலவாக்கோட்டை தேசிய வாலிபர் சங்கத்தின் கூட்டம் ஜூன் 19உ காலை 10 மணிக்கு, சங்க, உபதலைவர் ஸ்ரீமான் பெ ரி. சோலைக்குட்டி அம்பலம் தலைமையில் கூடி காரியதரிசி சமர்ப்பித்த மே. மாதக் கணக்கு ஒப்புக்கொண்டு, கீழ்க்கண்ட 2. தீர்மானங்களும் ஏகமனதாக நிறைவேறின.

(1) கொத்தபட்டணத்தில் ஏற்படுத்திய கோடைகால அரசியல் பள்ளிக் கூடத்தை, அக்கிரமமாய்க் கலைத்தும் மாணவர்களையும், தடியால் கடுமையாய் அடித்தும், கைது செய்த, சென்னை சர்க்காரின் செய்கையை இச்சங்கம் அழுத்தமாய்க் கண்டிக்கிறது.

(2) சென்னை கவர்ன்மெண்டார் சட்டத்திற்கும், ஜன நாயக முறைக்கும் மாறுக, ஒரு பொறுப்பற்ற மந்திரி சபையை ஏற்படுத்தி சட்டசபையைக் கூட்டாதிருப்பதுடன், துண்டுப் பிரசுர மூலம், காங்கிரஸ் கட்சியைப்பற்றிய விஷமப் பிரசாரம் செய்துவருவதை இச்சங்கம் பலமாகக் கண்டிருக்கிறது.

---

### மோல்மேன்தூன் அறிவானந்த வாசகசாலை

ஈசுவர ஆண்டுவைகாசித் திங்கள்பத்தாம் நாள் (23-5-37) மாலை 4 மணிக்கு வாசகசாலையின் தலைவர் திருவாளர் லெ. ராம. லெ. நா. நாராயணஞ் செட்டியாரவர்கள் தாய்நாடு செல்வதை முன்னிட்டு வாசகசாலைக் கட்டடத்தில் ஷை அங்கத்தினர்களால் சிறந்த தேனீர் விருந்து ஒன்று நடத்தப்பட்டது. அச்சமயம் இளைஞர் திரு. சிலையப்பனல் பாரதியாரின் கீதங்கள் மிகவும் உருக்கமாகப் பாடப்பெற்று தலைவரவர்கட்கு உபசாரப்பத்திரம் வாசித்தளிக்கப்பெற்றது. திருவாளர்களான சுப. சோமசுந்தரம், மு. பெரி. வீர. அளகர்சாமி வேளார் K.'O. நாதன் முதலிய அன்பர்களால் தலைவரின் பொதுநல ஊழியத்தை பாராட்டிப் பேசியபின் புகைப்படம் எடுக்கப்பட்டு வந்தனோபசாரத்துடன் 6-30 மணிக்கு இனிது முடிவுற்றது.

---

### வருஷாபிஷேகத் திருவிழா
#### கோத்தமங்கலம்

திரிபுரசுந்தரி அம்பாள் சமேத ஸ்ரீ திரிபுரேஸ்வரர் சுவாமிக்கு வருஷாபிஷேகம் ஈசுவர ஆண்டு ஆனி மீ 13உ (26-6-37) சனிக்கிழமை நடைபெறும்.

இன்று இரவு பஞ்சமூர்த்திகள் பவனி வருதலும், திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை நாதஸ்வரமும், பரதநாட்டியக் கச்சேரி, சரகம், வாணக்காட்சிகளும் நடைபெறும்.

## உத்தியோக மாற்றம்

சிவகங்கை சப்ஜட்ஜ் ஸ்ரீமான் ஏ. ராமநாதய்யர் மாயவரம் சப்கோர்ட்டுக்கு மாற்றப்பட்டிருக்கிறர்.

ராமநாதபுரம் ஜில்லா முன்சிப் ஸ்ரீமான் அப்துல்லாகான் கோரிசாஹிப் பகதூர் மதுரை சப்ஜட்ஜாக ஆக்ட் செய்ய நியமிக்கப்பட்டிருக்கிறர்.

மதுரை சப்ஜட்ஜ் ஸ்ரீமான் டி. வாசுதேவ ராவ் ஸ்ரீமான் ஏ. ராமநாதய்யருக்குப் பதிலாக சிவகங்கை சப்ஜட்ஜாக நியமனம்.

கோபிசெட்டிபாளையம் ஜில்லா முன்சிப் ஸ்ரீமான் எம். எஸ். நாராயணசாமி அய்யர் தேவகோட்டை சப்ஜட்ஜாக மாற்றம்.

---

### ஆத்தங்குடி

ஈசுவர ஆண்டு ஆனி 3உ (16-6-37) புதன்கிழமை மாலை 5 மணிக்கு மகாத்மா காந்தி வாசகசாலைக்கு நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுப்பதற்காக அங்கத்தினர்கள் கூட்டம் பழ. நாராயணன் செட்டியார் தலைமையில் கூடி கீழ்க்கண்ட நிர்வாகஸ்தர்கள் ஏகமனதாகத் தேர்தெடுக்கப்பெற்றனர்.

தலைவர்:-முரு. பெரியகருப்பன் செட்டியார், உபதலைவர்:-என். வி. ஸ்வாமி நாயுடு, காரியதரிசி:- வயி. ஸ்ரீநிவாஸன், உதவிக் காரியதரிசி:-பழ குமரப்பன்.

---

### குருடு செவிடு ஊமைக் குழந்தைகள்
#### இந்தியாவில் அவர்கள் எண்ணிக்கை

இந்தியாவில் 1931-ம் வருஷத்திய ஜனத்தொகைக் கணக்குப்படி 5 வயதிலிருந்து 15 வயது வரையுள்ள குருடு, செவிடு, ஊமைக் குழந்தைகளின் தொகை 108000 ஆகுமென்று தெரிகிறது.

ஷை குழந்தைகளில் 1. 4% விகிதந்தான் இந்தியாவில் கல்வி பெறுகின்றன ரென்று சமீபத்தில் சேகரித்த புள்ளி விபரங்களிலிருந்து தெரிகிறது.

. சென்னை மாகாணத்தில் ஷை செவிடு, ஊமைகளுக்காக 6 பள்ளிக்கூடங்களும், குருடர்களுக்காக 4 பள்ளிக்கூடங்களும் இருக்கின்றன. மாணவர்கள் தொகை முறையே 372, 144. மொத்தம் 516 ஆகும்.

---

### பிரிட்டனில் புதிய லாபவரி

புதிய லாப வரியைப்பற்றி ஜூன் 10உ வெளியான சர்க்கார் அறிக்கையிலிருந்து தெரியவருகிறது. இவ்வரி 5 வருஷ காலம் அமுலிலிருக்கும். உத்தியோகங்கள் மூலம் கிடைக்கும் வருவாய் மீது இவ்வரி விதிக்கப்படமாட்டாது.

2000 பவுனுக்கு மேற்பட்ட தொகைகள் மீது இவ்வரி விதிக்கப்படும். இதன் மூலம் $2\frac{1}{2}$ கோடி பவுன் வருமானம கிடைக்குமென்று தெரிகிறது.

## சாரதாச் சட்டம்

### ஒரு கல்யாணத்திற்குத் தடை

சென்னை, ஜூன், 19உ

விருத்தாசலம் தாலூகா எருமனூரைச் சேர்ந்த பச்சைமுத்து உடையான் தனது சகோதரி பெண்ணின் கலியாணத்தைத் தடைசெய்யவேண்டுமென்று ஜஸ்டிஸ் வெங்கடசுப்ப ராவ் முன்பாக மனுச் செய்து கொண்டார்.

தனது சகோதரியின் குமாரத்திக்கு வயது 9-தான் ஆகிறதென்றும் மணமகனுக்கு வயது 16க்கு மேலாகவில்லையென்றும். ஜூன் 21உ புதுச்சேரியில் கலியாணம் நடத்தத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறதென்றும், இக் கலியாணம் சாரதாச் சட்டத்திற்கு விரோதமானதால் அதைத் தடைசெய்ய வேணடுமென்றும் மனுதார் கோரினர்.

ஹைகோர்ட் நீதிபதி கலியாணத்தைத் தற்காலிகமாகத் தடைசெய்து பெண்ணை கோர்ட்டில் ஆஜர்செய்ய வேண்டுமென்று உத்தரவிட்டார்.

---

### ஒரு விருந்து

கோட்டையூர், ஜூன், 19—

இவ்வூரைச் சேர்ந்த நகாவேலன் குடி கும்பாபிஷேக பாதுகாப்புக்காகச் சென்றிருந்த ஓ. சிறுவயல் நகரத்தார் (ஸ்கவுட்) கோஷ்டி அவர்களுக்கு தோழர் அ. க. லெ. அண்ணமலை அவர்கள் தமது இல்லத்தில் ஓர் சிற்றுண்டி விருந்து நடத்தி வைத்தார்கள்.

மேற்படி ஸ்கவுட் கோஷ்டியார் திருக்கொள்ளம் பூதூர் கும்பாபிஷேகத்துக்கு அழைக்கப்பட்டிருப்பதை முன்னிட்டு நாளது ஆனி 11உ ஓ. சிறுவயலிலிருந்து புறப்படுகிறர்கள்.

---

### காங்கிரஸ் காரியக் கமிட்டி
#### ஜூலை 5-ந் தேதி கூடும்.

பம்பாய், ஜூன் 20—

காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம் ஜூலை மாதம் 5ந் தேதி கூடுமெனத் தெரிகிறது. ஜூலை மாதம் எந்தத் தேதியில் கூட்டம் போடுவது வசதியாக இருக்குமென ராஷ்டிரபதி கேட்டதற்கு, சர்தார் பட்டேல் தந்திமூலம் 5ந் தேதி கூட்டலாமென அறிவித்திருக்கிறர்.

---

### காங்கிரசுக்கு லாபம் 40,000 ரூபாய்!

பெய்ஸ்பூரில் காங்கிரஸ் மகாநாடு கூட்டியதன் கணக்கு விவரங்கள் பூராவும் ஆடிட்டரிடம் சமர்ப்பிக்கப்பட்டாகி விட்டன. வரவேற்புக் கமிட்டி ஆபீஸ், ஜால்கனுக்கு மாற்றப்பட்டது. பெய்ஸ்பூர் காங்கிரஸ் மகாநாடு நடத்தியதின மூலம் 40,000 ரூபாய் லாபம் கிடைத்திருக்கிறதாகத் தெரிகிறது.

## சீர்திருத்தத்திற்கு எதிர்ப்பு

### துருக்கியில் பலத்த உயிர்ச்சேதம்

இஸ்டான் புல் ஜூன் 16—

மேற் குறிப்பிட்ட தேதியில் சர்க்கார் விடுத்த அறிக்கையிலிருந்து டோக் பிரதேசத்திலுள்ள கூர்து ஜாதியினர் பெருங் கலகங்கள் செய்ததுபற்றிய விஷயங்கள் தெரியவருகின்றன. சர்க்காரின் சீர்திருத்தப் போக்கினைக் கண்டு அந்த ஜாதியின் தலைவர்கள் மிக்க ஆத்திரமடைந்திருக்கின்றனர்.

கலகக்காரர்களை எதிர்த்து அடக்க சர்க்கார் பல விமானங்களுடன் 25 ஆயிரம் துருப்புகளை அனுப்பினர்.

கலகக்காரர்களில் உயிரிழந்தோர் காயமடைந்தோர் இவர்களின் தொகை 5000க்கு மேலிருக்கும். நிலைமை இப்பொழுது முற்றும் சீர்பெற்றிருக்கிறது.

சர்க்கார் தரப்பில் 13 பேர் கொல்லப்பட்டிருக்கின்றனர்.

ரண்டு துப்பாக்கியும் கையில் சவுக்கும் வைத்துக்கொண்டிருக்கும் துருக்கி தேசத்திலேயே வைதீகர்கள் இவ்வளவு தடபுடல் செய்தால் கத்தியுமில்லை கப்படாவுமில்லாத இந்த தேசத்திலே தலை கீழாகத் தாவாமல் என்ன செய்வார்கள்!

---

### ஆலயப் பிரவேசம்

பஞ்சாபிலுள்ள நஹான் சமஸ்தானத்தில் எல்லாக் கோயில்களிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரை அனுமதிக்கும் அந்த சமஸ்தான மகாராஜா உத்தரவு பிறப்பித்திருக்கிறார்.










Bleed through.



## காரைக்குடி முனிஸிபாலிடிக்கு சர்க்கார் நோட்டீஸ்

### 14 நாட்களில் பதில் அனுப்ப உத்தரவு

கல்லுக்கட்டி ஊருணியைச் சுற்றியுள்ள இடங்களை கடைகள் வைத்துக்கொள்வதற்காக லீசுக்கு விடவேண்டுமென்று காரைக்குடி முனிசிபாலிடி 1936 டிசம்பர் 21உ யன்று ஓர் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. ஷை தீர்மானத்தை முனிசிபல் ஆக்ட் 36 (1) I (C) பிரிவுப்படி ஏன் ரத்து செய்யக்கூடாதென்று சென்னை சர்க்கார் காரைக்குடி முனிசிபல் சபைக்கு ஒரு நோட்டீஸ் அனுப்பி 15 நாட்களுக்குள் இதற்கு பதில் கூறவேண்டுமென்று உத்தரவிட்டிருக்கிறர்கள்.

டிஸ்டிரிக்ட் ஹெல்த் ஆபீஸர் அவர்கள், கடைகள் வைப்பதால் ஷை ஊருணியில் ஏராளமான குப்பைகளும் அசுத்தங்களும் போடப்படுகின்றனவென்றும் அவ்விடங்களில் கடைகள் வைக்க லைசென்ஸ் கொடுக்கக்கூடாதென்றும் அபிப்பிராயப்பட்டிருந்தும் முனிசிபாலிடியார் லீசுக்கு விடுவதென்று தீர்மானித்துவிட்டார்கள்.

தாசில்தாரும், கலெக்டரவர்களும் ஷை கல்லுக்கட்டி ஊருணியையும், கடைகளையும் பரிசீலனை செய்த பிறகு ஜில்லா மெடிகல் ஆபீசரின் அபிப்பிராயப்படி அவ்விடங்களில் கடைவைப்பது சரியல்லவென்றே முடிவு செய்தார்கள்.

இவைகளை யெல்லாம் அனுசரித்து கல்லுக்கட்டி ஊருணியைச்சுற்றிக் கடைவைப்பதென்ற முனிசிபாலிடியாரின் தீர்மானம் நிறைவேற்றப்பட்டால், அதனல் பொது ஜன ஆபத்தும், சுகாதாரக்கேடும் இதர அசௌகரியங்க ளெல்லாம் ஏற்படக்கூடுமென்று சர்க்கார் கருதுவதால் ஷை தீர்மானத்தை ஏன் ரத்துசெய்யக் கூடாதென்று கௌன்சிலைக் கேட்டிருக்கிறர்கள்.

இவ்விஷயத்தை ஆலோசிக்கக் கூடிய விரைவில் முனிசிபல் அவசரக்கூட்டம் நடைபெறுமென்று தெரிகிறது.

---

### "வரியை உயர்த்தினல் ராஜிநாமா"
#### புதுக்கோட்டை முனிஸிபாடியில் விவாதம்

ஜனத்தொகையின் விகிதாசாரப்படி கணக்கிடும்பொழுது புதுக்கோட்டையில் தலா 1-3-3 தான் முனிசிபாலிடிக்கு வரி கொடுக்கிறர்கள். ஆகவே இந்த அளவை இன்னும் சிறிது உயர்த்தவேண்டுமென்று புதுக்கோட்டை தர்பார் அனுப்பியிருந்த விஷயத்தை ஒட்டி முனிசிபல் சபையில் 18உ யன்று விவாதம் நடந்தது. சேர்மென் உள்படப் பல மெம்பர்கள் வரியை உயர்த்தவேண்டிய அவசியமில்லை யென்று அபிப்பிராயப்பட்டார்கள். எஸ். விஸ்வநாதய்யர் பேசுகையில், நமது முனிஸிபாலிடியில் தர்பார் குறிப்பிடுகிறபடி வரியானது குறைவாக இருந்தால் அது பாராட்டத்தக்கதுதான் என்றும், இந்தக் குறைந்த வரியைக் கொடுக்கவே ஜனங்கள் கஷ்டப்படுகிறர்கள் என்றும், ஆகவே வரி உயர்வு அவசியமில்லை யென்றும், தர்பார் இந்த அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்ளாமல் விசேஷ அதிகாரத்தால் வரியை உயர்த்த முற்படுவார்களானல், தன்னையொத்த அபிப்பிராயமுடைய கௌன்சிலர் பலர் ராஜிநாமாச் செய்ய நேரிடுமென்றும் அவர் குறிப்பிட்டார்.

இது விஷயம் ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது.

---

### திருக்கொள்ளம்பூதூர் கும்பாபிஷேகம்
#### புதுக்கோட்டை உத்தரவு

நச்சாந்துபட்டி பெ. ராம. குடும்பத்தாரால் ஜூன் 27உ சிறப்பாக நடத்தப்பெறும். புதுக்கோட்டை சமஸ்தானத்திலிருந்து அங்கு செல்லும் யாத்ரீகர்கள் புதுக்கோட்டை ஜெனரல் ஆஸ்பத்திரியில் காலராத் தடுப்பு ஊசி குத்திக்கொள்ள வேண்டுமென்று புதுக்கோட்டை தர்பார் உத்தரவிட்டிருப்பதாகத் தெரிகிறது.









## டௌன் பிளானிங் ஸ்கீம்.

### ப்ரைவேட் ரோடுகள் விஷயமாக டைரக்டரின்குறிப்பு

முனிஸிபல் எல்லைகளுக்குட்பட்ட ப்ரைவேட் தெருக்களைப் பராமரிப்புச் செய்வதனல் ஏற்படும் செலவு யாரைச்சேர்ந்தது என்னும் விஷயமாக காரைக்குடி முனிஸிபல் கமிஷனர் ஸ்ரீமான். டி. புருஷோத்த முதலியாரவர்கள் டௌன் பிளானிங் டைரக்டர் அவர்களுக்கு எழுதியிருந்தார்கள். டவுன் பிளானிங் கமிட்டி டயரக்டரான ஸ்ரீமான். R. D. N. சிம்ஹம் அவர்கள் இவ் விஷயத்தைப் பரிசீலனை செய்து முனிஸிபாலிடிக்கு முடிவு தெரிவித்திருக்கிறர்கள். பிரைவேட் வீதிகளை சமப்படுத்துவது, சாலைபோட்டு ஒழுங்குபடுத்துவது, வடிகால் ஏற்படுத்தல், லைட்டுப் போடுதல் முதலிய காரியங்கள் மேற்படி பிரைவேட் வீதிகளின் சொந்தக்காரர்களின் கட்டாயக் கடமையாகும், ஷை சொந்தக்காரர்கள் அவ்வாறு செய்ய மறுத்தார்களாயின் முனிஸிபாலிடியின் நிர்வாக அதிகாரி தாமே மேற்படி காரியங்களைச் செய்து, அதற்கான செலவுகளை, டிஸ்டிரிக்ட் முனிசிபல் ஆக்டு 178 வது பிரிவுப்படி சொந்தக்காரரிடமிருந்து வசூல்செய்ய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும்.

பிரைவேட் வீதிகள் சம்பந்தமான எந்தச் சிறு செலவையும் முனிசிபாலிடி ஏற்றுக்கொள்வது ஒழுங்காகாது. ஸ்ரீரங்கம் முனிசிபாலிடியார் இத்தகைய செலவுகளை ஏற்றுக்கொண்டதற்காக சர் சார்ஜ் செய்யப்பட்டார்கள்.

டவுன் பிளானிங் கமிட்டி டைரெக்டரின் ஷை அபிப்பிராயத்திற்கிணங்கக் காரைக்குடி முனிசிபல் கமிஷனர் ஸ்ரீமான் புருஷோத்தம முதலியாரவர்கள் தகுந்த நடவடிக்கை எடுத்து வருகிறர்கள்.

---

### ஜமீன்தாரி முறையில் தீவிர மாறுதல்

பாட்ன, ஜூன் 5உ

நில பாத்திய, ஜமீன்தாரி முறைகளில் தீவிர மாறுதல்கள் செய்யப்படவேண்டுமென்று கிருஷிகர் விசாரணைக் கமிட்டி சிபார்சு செய்திருப்பதாகத் தெரிகிறது. ஷை கமிட்டியை பீகார் மாகாணக் காங்கிரஸ் கமிட்டி நியமித்தது. ரிப்போர்ட் இப்பொழுதுதான் பூர்த்தி செய்யப்பட்டது.

---

### மலேயா, பர்மா ஏஜண்டுகள்
#### நியமனம் பற்றி இந்திய சர்க்கார் ஆலோசனை

மலேயா, பர்மா முதலிய இடங்களில் ஏஜண்டுகளை நியமிப்பது சம்பந்தமாக இந்தியா கவர்மெண்டார் யோசித்து வருகின்றனரென்று தெரிகிறது.

மலேயாவில் ஏஜண்டு நியமிப்பது சம்பந்தமாக முடிவான தீர்மானம் ஒன்றும் ஏற்படவில்லை. ஒரு ஸீனியர் ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர் அதற்கு நியமிக்கப்படுவாரென்று தெரிகிறது.

---

### கௌரவ மாஜிஸ்டிரேட்டுகள்

குன்னக்குடி பெஞ்சுக்கோர்ட்டுக்கு ஸ்ரீமான்கள் வி. டி. கதிரேசன் செட்டியார், கே. பெரியண அம்பலம், ஆர். சுப்பிரமணியம் ஆகியவர்கள் கௌரவ மாஜிஸ்டிரேட்டுகளாக நியமிக்கப்பட்டிருக்கிறர்கள்.

---

### சென்னை சர்க்கார் காரியாலயங்கள்

உதகமண்டலம், ஜூன் 17உ

ஜூலை 17-ந் தேதியோடு முடியும் வாரத்தில் உதகமண்டலத்திலுள்ள சென்னை சர்க்கார் காரியாலயங்களை மூடிவிட்டு 5 தினங்களுக்குப் பிறகு சென்னையில் திறந்து வைப்பதென்று தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது.

நீடாழியினுற் சூழப்பட்ட இப்பாரத பூமி யாகிய நம் நாட்டின் கண் நம்மிந்திய வர்க்கத்தினருள் அடியிற்கண்ட முறைகளை மாற்றியமைப்பது விசேடமென "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல" எனும் நன்னூலாரின் அடைமொழிப் படி, ஏற்றதாமென எங்கள் அபிப்பிராயங்கள் சிலவற்றைக் காரணங்களுடன் குறிப்பிட முன்வந்துள்ளோம். இதைக் கண்ணுறும் மக்கள் யாவரும் கைக்கொள்ளுவார்களென திண்ணமாய்க் கருதுகின்றோம்.

நம்மில் ஒரு குடும்பத்தில் ஒருவனுக்கு ஆண்சந்ததி ஒன்றும், பெண் மகவு ஒன்றும் உற்பத்தியாய் வளர்ந்து கல்யாணப் பருவமடைந்த காலத்து, தகுந்த வதுவரர்களைத் தெரிந்தெடுத்து ஏக காலத்தில் ஒரே மணப்பந்தலில் இரு மக்களுக்கும் வதுவை நடத்துகிறோம். சின்னாட் கழித்து காலக்கொடுமையினுல் தனது மருமகளாகிய மாட்டுப் பெண் இறந்துவிடுவாளேயானுல் அவள் புருஷனும் தனது மகனுமானவன் உயிரினுக்குயிராயிருந்த மனைவி இறந்தனளே, இனி எப்படி தனித்திருப்பேனென துக்கிக்குங்கால், பெற்றோர்களும் பிறரும் ஒன்று சேர்ந்து "இது உலக சுபாவம் அதைப்பற்றி விசனமுறாதே அடுத்த இரண்டொரு மாதத்தில் மேலான குடும்பத்துப் பெண்ணைப் பார்த்து விவாஹம் நடத்தி வைக்கிறோம்" எனத் தேர்தல் சொல்லி அந்தப் படியே செய்தும் வைக்கிறார்கள். நிற்க, தன்னுடைய மகளை ஒருவனுக்கு மணஞ் செய்வித்தனுப்பிய பிறகு, மருமகனுடைய வாழ்நாள் கழிந்து ஒரு சுகமுமறியாத மனைவியை விட்டுப் பரலோகமடைகிறான். அப் பெண்ணின் தாய், தகப்பன், மாமன், மாமியார், மற்றுமுள்ள சுற்றத்தார்களும் "நாமென்ன செய்வது உன்னுடைய விதிவசம், நீ வாங்கி வந்த வரப்பிரசாதம், குறைக்கழுத்தியாக ஜன்மித்தாய்" என நிரூபித்து அவள் காலமுழுவதும் துக்கத்திலேயே மூழ்க வேண்டியவள் என்பதாகவும் அவளுக்கிதுகாறும் சுகாதாரத்தினிமித்தம் அணியக் கூடியதும், அணிந்துகொண்டிருந்ததுமான மங்கலநாண் பிற நகைகள், மஞ்சள், குங்குமம், புஷ்பம் முதலானவைகளை அறவே யொழித்து ஒருவேளையுண்டு, இன்னும் சில மதஸ்தர்களில் முண்டிதம் செய்து வெள்ளை வஸ்திரமுடுத்தி விரதாதிகளை அனுசரித்து தேகத்தை இளைக்கச் செய்து கடைசிநாளை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டியதென்று வைதிகங்களைக் கற்பிக்கிறார்கள், கற்பித்துக் கொண்டுமிருக்கிறார்கள்.

பெண்சாதியைப் பறிகொடுத்த புருஷனுடைய சௌகரியத்தின் பொருட்டு, உணவு முதலிய சுகபோகங்களுக்கு கஷ்டப் படாமலிருக்கும் நிமித்தம் எத்தனை தரம் வேண்டுமானுலும் மணம்செய்து கொள்ளுகிறார்கள்.

ஆண்களைப்போல் சர்வசமத்துவமுடைய பெண்களுக்கு இவ்வித கற்பனைகளைக் கற்பித்து, அவர்களை என்றும் மீளா அடிமைகளாக்கி ஆழ்ந்த கஷ்டசாகரத்தில் அமிழ வைத்து ஆண்களாகிய தாங்கள் மட்டில் அவர்களுக்கெதிராகப் "பசிக்க வைத்து உண்பதுபோல்" மீண்டும் ஏகபோக சுகங்களை ஆண்டு அனுபவித்துக் கொண்டு வருவதானது "உத்தமமானது, எவராலும் தவிர்க்கக்கூடாதது, சர்வ சம்மதமானது" என்று கற்பித்தெழுதி வைத்த பண்டைக் காலத்தினரான, அறிவீனர்களுடைய மூடப் பழக்க வழக்கங்களின் கூற்றுகள் இருந்தவாறென்னே! என்னே! யோசித்துப் பாருங்கள்! பாருங்கள்!!

ஆகவே, ஷை மூடப் பழக்க வழக்கங்களை அறவே ஒழித்து சமூக முன்னேற்றமடையுமாறும் மக்களனைவரும் மகிழ்ச்சியுடன் வாழ் நாளைக் கழிக்குமாறும், எப்படி ஆண் மகனுக்கு மனைவி இறந்தவுடன் மறுவிவாகம் அவசியமோ அதுபோன்று பெண் மக்களுக்கும் புருஷனுயிர் நீத்தபின் இளம் விதவைகளின் துக்கம் மாறபட அவர்கள் விரும்பினுல் விவாகம் செய்ய முற்பட வேண்டுமாய் அத்யாவசியமாய்க் கோரப்படுகிறது.

தற்காலம் நவ நாகரீக முறைப்படி நம்மவர்களில் சிலர் ஆங்கிலேயரிடமுள்ள நல்ல குணங்களைக் கைவிட்டு நம் நாட்டுக்கு அருகமல்லாத கெட்ட குணங்களை மட்டும் கையாள்கின்றனர். மேல்நாட்டார்களிடமுள்ள நற்குணங்களைக் கவனிக்குமிடத்து, அவர்களுள் ஆண் பெண் அபேதமுற்று சகலவற்றிலும் சாம சமத்துவம் பெண்களுக்குமளித்து சம உரிமையுடன் இன்புற்று வாழ்கிறார்கள்.

# மாதர் மறுமண சுதந்திரம்

## உரிமையற்ற பெண்களுக்கு உதவுங்கள்

இஃது இவ்வாறிருக்க, நம் நாட்டார் மட்டில்:—

1 "பாலொடு தேன் கலந்தாற்போல்— [பசும்
பாவையின் ஆருயிர்க்கணவர்
ஞாலத்தில் ஆவி நீத்தாலோ—மதம்
நங்கையைத் தண்டிப்பதேனோ?"

2 "வயது முதிர்ந்து தளர்ந்தே—உடல்
வாடிய கிழவனுக்கந்தோ!
நியமக் கலியாணஞ் செய்தால்—அந்த
நியாய மேன் பெண்களுக்கில்லை?"
என்பதற்கிணங்க

பெண்கள் தக்க பருவமடையாத காலத்து, குழந்தையாக இருக்கும் போதே, இஷ்டமும் பொருத்தமும் இல்லாத குரூபியாயும், வியாதியஸ்தனுயும், வயது முதிர்ந்து தளர்ந்த கிழவனுய் இருந்த போதிலும், செல்வந்தனுய் இருந்தால் போதுமானதென்று பொருளவாக் கொண்டு (தன்னலங் கருதி) விவாகம் செய்து வைத்துவிடுகிறார்கள். அப்படி செய்வித்த சிறுபோதிலேயே புருஷன் கால கதியால் பரலோகமடைந்தால் அது முதல் உலக அனுபவமே இன்னதென்றறியாத கன்னியை ஜன்ம தண்டனையென்பதற்கொப்ப இறந்த புருஷனையே தியானித்துக்கொண்டு விரதாதிகள் அனுஷ்டித்து தேகத்தை ஒடுக்க வேண்டுமென கடைசி காலம் வரை துக்கத்தையே குடிகொள்ளும்படியாய்ச் செய்கிறார்கள். அப்படிச் செய்வதால் விதவையான அவ்விளம் பெண்ணனவள் பந்துகளின் கட்டுப் பாட்டுக்கடங்கி நடக்கின்றாளாவெனக் கவனிப்பின், முற்றும் ஏமாற்றமடையுமாறு, அவ்விள விதவையானவள் தனக்குரிய பருவத்தை அங்கஜனுல் தூண்டப்பட்டு எக்குலத்தவனுயினும் ஒரு யவ்வன புருஷனுடன் சேர்ந்து வெளியேறி விடுகிறாள். என்னே! நம் நாட்டினர் பெண்களைக் கொடுமைப்படுத்தி இவ்வாறு இழிவடையும்படி செய்த, சற்றேனும் பொருத்தமற்ற மூடப் பழக்கவழக்கமான விதி, ஒழுங்கு, கட்டளை என்னும் சண்டாளக் கொடுமை? ஆ! ஹா!! இதைவிட சித்திரவதை வேறுளதோ! யோசித்துப்பாருங்கள்! அந்தோ! அந்தோ!! இனியாகிலும் சிறு வயது குழந்தை மணங்களையும் வயது முதிர்ந்து தளர்ந்த கிழவர்களுக்கும், குரூபிகளுக்கும், வயாதியஸ்தர்களுக்கும், ஒருவருக்கொருவர் இஷ்டமில்லாமலும், பொருத்தமில்லாமலும் செய்யும் மணங்களையும் அறவே நிவர்த்தி செய்தும் இளம் வயதில் விதவையானவர்களுக்கு மறுமணம் செய்வித்தும் தீராத ரோக வியாதியுடைய இளைய புருஷர்களுக்கு மணமே கூடாதென மறுத்தும் வந்தார்களேயானுல் நம் நாடு சுபகரமாகவும் இந்திய சந்ததிகள் தீர புருஷர்களாகவும் அறிஞர்களாகவும் அடிமைத் தளையை யறுக்கக்கூடிய திறமை வாய்ந்தவர்களாகவும் இருப்பார்களென நிச்சயமாகச் சொல்லுகிறோம். ஆகவே ஒவ்வொருவரும் ஷை விஷயங்களை ஊன்றி கவனித்து விதவா விவாகத்தை நடைமுறையில் கையாண்டு வர வேண்டுமாய் இதன் மூலம் வற்புறுத்துகின்றோம்.

தவிர அரசாங்கத்தாரால் ஆண்மக்களுக்கும் பெண் மக்களுக்கும் சட்டசபைகளிலும் இதர ஸ்தல ஸ்தாபனங்களிலும் மற்றும் சில இலாக்காக்களிலும் முறையே அங்கத்தினராக நியமிக்கப்பட்டும் உத்தியோகங்கள் கொடுக்கப்பட்டும் வருகின்ற இக்காலத்திலேயே நம்மிந்திய பெண்மக்களை வெள்ளாட்டியாகவும் மகவுபெறுவிக்கும் இயந்திரம் போலும் அடுப்பூதும் அடிமைகளெனவும் கருதி இழிவாக நாம் நடத்தி வருவதை அறவே யொழித்து ஆண் பெண் அபேதமுற்று பெண்மக்களும், ஆண்மக்களுடனிருந்து தேசத்தொண்டு புரிவதிலும், மேலும் தம்பதிகளில் "பாரியாள்" என்பதன் பொருள் "பாதியாள்" என்பது பொருந்துமாகையால், குடும்பம் என்னும் இராஜ்யத்திற்கு புருஷன் அரசனுகவும், மனைவி மந்திரியைப் போன்றும் சம உரிமைகளைப் பெற்று ஒற்றுமையுடன் குடும்பம் என்னும் ராஜ்யத்தை நடத்தி வருவதற்கு முதன் முதலாக வேண்டப்படுவது கல்வியாதலால், பெண்களுக்குக் கட்டாயக் கல்விவசதியைத் தேடிக் கொடுத்து, அறிவுள்ளவர்களாக்குவித்தல், பருவமடைந்த பின் இஷ்டமான கணவனை தேர்ந்தெடுத்து மணத்தல், சிறு வயதில் புருஷன் இறப்பின் விதவாவிவாகத்தைக் கைக்கொள்ளல், புருஷனிறந்த பிறகு அவனுல் தரிக்கப்பட்ட மாங்கல்யத்தை மட்டில் நீக்கி மற்ற மஞ்சள், குங்குமம், புஷ்பம், முதலியவைகளையும் மற்ற ஆபரணங்களையும் விடாது தரித்து, எப்படி "தாரமிழந்தவன்" என்று ஒருவனைப் பார்த்த மாத்திரத்தில் கருத முடியாதோ அஃதே போன்று புருஷனையிழந்தவள் "விதவை" என்று கருதாவண்ணம், கன்னிப்பெண் போல் லக்ஷணமாக இருக்கச் செய்தல், என்னும் ஜாதிசமய முன்னேற்றங்களுக் கேதுவான விஷயங்களை ஆங்காங்கு சங்கங்கள் நிறுவி மேலே கண்ட விஷயங்களை அங்கீகரித்துக் கொண்டு நடைமுறையில் காண்பிக்க வேண்டுமென்று நமது பேதைப் பெண்களின் மீதுள்ள ஆருமையை முன்னிட்டு வற்புறுத்திக் கூற முன் வரலானோம்.

மேலும் நம்மிந்திய மக்களில் ஆண்பாலர், தாரம் தவறி விடுமானுல் அடுத்தாப்போல் வேறுமனைவியை யடைந்து குடும்பத்தை நடத்த முற்படுகிறார்கள். பெண்களுக்கோ அப்படியின்றி புருஷனிறந்த பின் விதியை அவள் மேல் சுமத்தி அவளுடைய விதிவசம் அப்படியாயின் நாமென் செய்வது என மழுப்பி யாதொரு விமோசனத்துக்கு இடமின்றி பெரியோர் எழுதிவைத்ததும் ஓரவஞ்சனை யானதுமான புராணக் கட்டுக்கதைகளைக் கொண்டு அவர்கள் வாழ் நாள் பூராவும் துக்க சாகரத்தை யடைய வேண்டிய மார்க்கங்களென்னென்னவுண்டோ அத்தனையும் செய்யும்படி மூலைக்கு மூட்டாகச் செய்து விடுகிறார்கள். இஃது இப்படி இருக்க நாம் ஒவ்வொருவரும் அனுபவித்து வரும் கல்வி, செல்வம், தைர்யம் என்பவைகளை முறையே சரஸ்வதி, லக்குமி, பராசத்தி, என்றும் பெண் தேவதைகளாகவே சொல்லப்பட்டு அவர்களுக்குறிய கணவன்மார் தங்களை முறையே நாவினிடத்தும் மார்பகத்திலும், தேசத்தின் இடப்புறத்தும் அமைத்து நீங்காச் சன்னதமாக தங்கள் காரியங்களுக்கு உடனிருந்து தொழிற்செய்ய வல்ல சத்திகளென்பதாயும், அச்சத்திகளில்லாவிடில் அவரவர்கள் தொழின் முறைகளைச் செய்ய இயலா வென்றும் ஆன்றோர் அளவிட்டுரைத்திருக்கின்றனர். அவ்விஷயங்கள் முற்று மறிந்த நாம் அத்தகைய மேன்மை படைத்தவர்களின் அம்சமாகிய நம் பெண்மக்களுக்கு கல்விகற்கும்படிச் செய்தால் புருஷனை மிஞ்சி விடுவார்களென்றும் என்றைக்கும் புருஷாளுக்குப் பெண்கள் அடிமைகளாகவே யிருந்து காலங்கடத்த வேண்டுமென்றும் கெட்ட அபிப்ராயத்துடன், ஆண்மக்களனைவரும் பெண்களை கல்வி வாசனையே யில்லாமற் செய்து விடுகிறார்கள், இதுகளைக் கவனித்து இன்றுமுதல் பெண்களுக்கு கட்டாயக் கல்வியைக் கையாண்டு ஆண்மக்களுக்குரிய சுவதந்திரத்தை பெண்மக்களும் அடையவேண்டி பெண்கள் தன்னை யறிந்த காலத்து அவர்களின் மனதுக்கிசைந்த ஆடவர்களை மணக்கச் செய்து காலகதியால் புருஷன் மரணமடைந்த காலத்து இளம்பெண்களாயிருப்பின் இஷ்டப்பட்டால் மறுமணம் செய்வித்தும் உத்தம திடகாத்திரமான சந்ததிகளை யுற்பத்தி செய்து தேச முன்னேற்றமடையுமாறு நம் தேச மக்கள் ஒவ்வொருவரும் முயற்சி யெடுத்துக்கொண்டு விதவா விவாகத்தை ஆதரிக்க முன்வருவார்களென்று கேட்டுக் கொள்ளுகிறோம் என்று செஞ்சி குழந்தைவேலாயுதாச்சாரி எழுதுகிறார்.





# வோட்டர் ஜாபிதா மறுவெளியீடு

## எழுத்தறிவு யோக்யதாம்சங்கள் சம்பந்தமாக மாறுதல்

சென்னை, ஜூன். 19—

சென்னை அஸெம்பிளி, கவுன்சில் சம்பந்தமாகவுள்ள வோட்டர் ஜாபிதா மறு வெளியீட்டுத் தயாரிப்பு, மறு பரிசீலனை, பிரசுரம் இவைகளை யொட்டி சில திருத்தங்கள் செய்யுமாறு ஸ்தல சர்க்கார் உத்திரவிட்டிருக்கின்றனர்.

சர்க்கார் சில முக்கியமான திருத்தங்களை வாக்குகளைப் பதிவு செய்யும் அதிகாரிகளின் கவனத்திற்குகொண்டு வந்திருக்கின்றனர். அது விவரம் பின் வருமாறு:—

இதுவரையிலும், சென்னை கார்ப்போரேஷன் கமிஷனர், மாகாண சர்வகலாசாலை ரெஜிஸ்திரார்கள், நகரசபை கமிஷனர்கள் இவர்களிடம் வோட்டர்களைப் பதிவு செய்யும் வேலைகள் ஒப்படைக்கப்பட்டிருந்தன. இப்போது இந்த வேலைகள் மேற்படியார் களிடமிருந்து எடுக்கப்பட்டு, சென்னை நகரம், சர்வ கலாசாலைகள் இவை விஷயத்தில் சென்னை கலெக்டரிடமும், முனிசிபல் பிரதேசங்களானுல் அவைகள் நிர்வாக எல்லைக்குட்பட்ட ரெவினியு டிவிஷனல் அதிகாரிகளிடமும் (சப்கலெக்டர்)ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன.

மேலும் வோட்டர்கள் பெயர்வாரி ஏற்பாடும் திருத்தப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு கிராமம், அல்லது வார்டுகள் வீதிகள் இவைகளின் கீழ் இனி பெயர்கள் வரும். அவசியம் ஏற்பட்டால், போலிங் ஏரியாக்களை மீண்டும் திருத்தி யமைப்பதற்கு இந்த ஏற்பாடு சௌகர்யமா யிருக்கும்.

மேலும் சர்க்கார் அறிக்கை கூறுகிறது:—

பதிவாளர் நமூனுக்களும் திருத்தப்பட்டிருக்கின்றன. எழுத்தறிவு யோக்கிய தாம்சங்களுள்ள வாக்காளர்கள் தங்கள் நமூனுக்களை நேரிலேயே கொடுத்து வோட்டராக வேண்டுமென்ற நிபந்தனை எஸ். எஸ். எல். சி. யோக்கியதாம்சமுடையவர்கள், அல்லது இதற்குச்சமமான யோக்கியதாம்சங்களை யுடையவர்கள் இவர்கள் விஷயத்தில் மட்டும் ரத்துச் செய்யப்பட்டுள்ளது. கம்பிளீட் செய்த எஸ். எஸ். எல். ஸி. க்கு சமமான யோக்கியதாம்சங்களின் ஜாபிதா ஒன்று பின்னர் வெளியிடப்படும்.

பதிவு நமூனுக்களை பெற்றுக்கொள்ளும் காலம் இப்போது புனராலோசனை செய்யும் அதிகாரி தமது வேலையை ஆரம்பிக்கும் தேதிக்கு நீடிக்கப்பட்டிருக்கிறது.

வர்த்தகம், கைத் தொழில், தோட்டத் தொகுதிகளிலுள்ள வாக்காளர்கள் ஜாபிதாக்களில் சேர்க்கப்பட்டுள்ள, ஒரு கார்ப்பேரேஷன், கம்பெனி, அல்லது ஹிந்து அவிபக்த குடும்பம் இவைகள் தங்கள் சார்பாக ஓட்டர்களாக நியமித்துள்ள மனிதர்களின் பெயர்களை மாற்றிக்கொள்ள உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனுல், பெயர் மாற்றல் விவகாரமெல்லாம் இனி முடிவான நியமன ஜாபிதா பிரசுரத்திற்குப் பின்பு கவனிக்கப்பட மாட்டா.

## சுங்க நஷ்டஈடு பணம் ரூ. 8 லட்சம் விநியோகம்

சென்னை, ஜூன் 21—

சுங்க வரி நஷ்டஈடு விஷயமாக முதல் தவணையாக ஸ்தல ஸ்தாபனங்களுக்குச் சர்க்கார் ரூ. 8 லக்ஷம் விநியோகம் செய்ய (1937-38) உத்தேசித்திருக்கின்றனர்.



# பிரஞ்சு மந்திரி சபை ராஜீநாமா

## அவசர அதிகார மசோதாவுக்கு எதிர்ப்பு

பாரிஸ், ஜூன் 21

பிரதிநிதி சபையில் மீண்டும் நிறைவேறின அவசரஅதிகார மசோதாவை செனெட் சபை நிராகரித்தகால், புளும் மந்திரிசபை உடனே கூடி ஆலோசித்து, பதவியை ராஜிநாமாச் செய்வதென்று தீர்மானித்தது.

அதன்படியே ஸ்ரீ. புளும் தனது ராஜிநாமாவை குடியரசுத் தலைவரிடம் சமர்ப்பித்தார்.

பிரதிநிதி சபையின் மசோதாமீது செனேட்டில் வோட்டு எடுப்பதற்கு முன், முதன் மந்திரி ஸ்ரீ. புளும் பின்வருமாறு பேசினர்:-

### புளும் பிரசங்கம்

"செனேட்டில் பெரும்பாலோரின் உணர்ச்சியை நான் அறிவேன். அவர்கள் பொது ஜன ஐக்கியக் கக்ஷியின்பால் விரோதப் பான்மை கொண்டவர்கள் என்பது எனக்குத் தெரியும். செனேட் சபை இப்போதுள்ள சர்க்காரிடம் நம்பிக்கை வைக்கவுமில்லை; அதிகாரம் கொடுக்கவும் மறுக்கிறது. செனேட் சபையானது சர்க்காரிடம் நம்பிக்கையிருப்பதாக அறிவிக்க வேண்டுமென்பதே எங்கள் கோரிக்கை. இது மறுக்கப்படுமானுல், நாளை என்ன நடக்கும் என்பதை நான் சொல்ல வேண்டியதில்லை.

எங்கள் சர்க்கார் இந்த ஒரு வருஷத்தில் செய்த காரியங்கள், இந்நாட்டுப் பொதுமக்களின் ஆதரவைப் பெற்றுள்ளன என்பதை நான் பெருமையுடன் சொல்வேன் வெளி நாடுகளிலும் இந்த சர்க்காரின் காரியங்கள் நன்கு மதிக்கப்படுகின்றன,"

முடிவாக வோட் எடுத்தபோது, பிரதிநிதி சபையின் மசோதாவுக்கு எதிராக 168 வோட்டுகளும் சாதகமாக 96 வோட்டுகளும் விழுந்தன. மசோதா தோற்றது.

செனேட் சபை சொந்தமாகத் தயாரித்த மசோதா மெஜாரிட்டியுடன் நிறைவேறியது. (வோட் 182: 82.)

## திருவனந்தபுரம் சகோதரிகள் கதா காலக்ஷேபம்

காரைக்குடி திருவாளர், நா. வ. மெ. மெ. பழநியப்பன்மகன் திரு மெய்யப்பனுக்கு நடைபெறும் திருமணத்தை முன்னிட்டு ஈஸ்வர ஆனிமீ 15௳ திங்கட்கிழமை (28-6-37) மாலை 5-மணிக்கு திருவனந்தபுரம் சகோதரிகளான ஸ்ரீமதிகள் PL. லட்சுமி, PL. பார்வதி, PL. சுப்புலட்சுமி இவர்களால் ஷியார் கிரகத்தில் கதா காலக்ஷேபம் நடைபெறும்.

## ரஷ்யாவில் பெண் மந்திரி கைது

### பணத்தைக் கையாடியதாக

மாஸ்கோ. ஜூன், 20—

கிரிமியா குடியரசில்சமூகபாதுகாப்புமந்திரியான ஸ்ரீமதி அலெக்ஸாண்ட்ரா ஜம்பிலேவா கைதுசெய்யப்பட்டிருக்கிறார். டிராட்ஸ்கியின் சதிகாரக் கும்பலின் உபயோகத்திற்காக பொதுப் பணத்தைக் கையாடிய ஒரு கோஷ்டிக்குத் தலைவியாயிருந்ததாக அவர் மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது.

# வைசிராய் பிரசங்கம்

## பத்திரிகைகள் அபிப்பிராயம்

### "ஸ்டேட்ஸ்மன்"

"சட்டத்தினுடைய வாசகத்திலிருந்தோ நோக்கத்திலிருந்தோ ஒரு இம்மி கூட மாறாமல் காங்கிரஸ் கேட்டதை வைசிராய் செய்துவிட்டார். கவர்னர்கள் விசேஷ அதிகாரத்தை உபயோகிக்க மாட்டார்களென்றும் மந்திரிகளின் சட்ட ரீதியான நடவடிக்கைகளில் அவர்களுடைய ஆலோசனையை கவர்னர் நிராகரிக்க மாட்டாரென்றும் வைஸ்ராய் உறுதிகூறிவிட்டார்."

### 'ஆனந்த பஜார் பத்ரிகா'

செய்தியின் வாசகம் நன்றாயிருக்கிறது. இருந்தாலும் அரசியல் நெருக்கடியைத் தீர்ப்பதற்கு காங்கிரஸ் தலைவர்களுக்கு உதவி செய்யக்கூடியதெதுவும் அதில் இல்லாதது வருந்தத்தக்கதே."

### 'பாஸுமதி'

"இப்போதைய பிரச்னைகளுக்குப் பரிகாரம் எதுவும் வைஸ்ராய் செய்தியில் இல்லை. புதிதாகவும் எதுவுமில்லை"

### 'அமிருதபஜார் பத்ரிகா'

நொடுக்கும் விஷயத்தில் வைஸ்ராயின் செய்தி அதிருப்தி யளிப்பதாய்த் தான் இருக்கிறது. ஆனுல் நிலைமை தெளிவுபட்டிருக்கிறது. இந்தச் செய்திக்குப் பிறகு காங்கிரஸ் தன் கௌரவத்திற்குக் கொஞ்சமும் பங்கமில்லாமல் பதவி யேற்றுக் கொள்ளலாம்."

### 'டைம்ஸ் ஆப் இந்தியா'

"இனி சில்லரை வாதங்கள் செய்வதற்கோ எந்தப் பிரச்னையின் மீதும் அபிப்பிராய பேதம் இருப்பதாகத் தட்டிக் கழிப்பதற்கோ இடமில்லை"

### 'பம்பாய் கிரானிகிள்'

"வைஸ்ராயின் நல்லெண்ணத்தைப் பாராட்டுகிறோம். ஆனுல் காந்திஜியின் சமரச மனப்பான்மையை அங்கீகரிக்காமல் நல்ல சந்தர்ப்பத்தை நழுவ விட்டுவிட்டார்களென்றே நாம் கருதுகிறோம். லார்ட் ஜெட்லண்டு பேசியதில் இருந்ததைத் தவிர இதில் புதிதாக ஒன்றுமே இல்லை. வெறும் வார்த்தைகளாகவே நிரம்பியிருக்கிறது"

### 'லண்டன் டெய்லி ஹெரால்டு'

"இப்பொழுதுள்ள தப்பபிப்பிராயங்களை மாற்றுவதற்கு வைசிராய் மிகவும் அந்தரங்க சுத்தியுடன் பெரிய முயற்சி செய்திருக்கிறார். காங்கிரஸ்காரர் மந்திரி பதவிகளை ஏற்கவேண்டுமென்பதே காந்திஜியின் விருப்பமானுல் வைசிராயின் பதில் திருப்திகரமானதே"

### 'மார்னிங் போஸ்ட்'

(சர்ச்சில் கோஷ்டிப் பத்திரிகை)

வைசிராயின் செய்தியானது இந்திய அரசியல் பிரச்னையில் புதிதாக ஒன்றையும் புகுத்திவிடவில்லை. புதிய அரசியல் திட்டம் காரியாம்சத்தில் நடைபெறுவதற்கு நமது சர்க்கார் தன்னுலியன்றதையெல்லாம் செய்கிறது என்பதற்கு இந்த அறிக்கை ஒரு அத்தாட்சி.



# புதியமன்னர் ஸ்டாம்புகள்

## ஆகஸ்டில் விற்பனைக்குத் தயாராகும்

ஸிம்லா, ஜூன் 19௳

இவ்வருஷ ஆகஸ்டு மாதத்தில் புதிய மன்னர் ஆறுவது ஜார்ஜின் உருவம் அமைந்த ஸ்டாம்புகள் விற்பனைக்குத் தயாராகும்.

ஆரம்பத்தில் ஓரணு, முக்காலணு, காலணு ஸ்டாம்புகளே அச்சிடப்படும். ரூபாய் ஸ்டாம்புகள் இங்கிலாந்தின் அனுமதிக்காக அனுப்பப் பட்டிருக்கிறது.

ஒன்றரையணு, இரண்டணு ஸ்டாம்புகளின் மாதிரிகள் ஆலோசிக்கப்பட்டு வருகின்றன. கூடிய சீக்கிரம் முடிவு ஏற்பட்டு ஸ்டாம்புகள் வெளியாகும்.

இப்பொழுதிருக்கும் ஸ்டாம்புகளைக் காட்டிலும் வரப்போகும் புதிய ஸ்டாம்புகள் மிக நேர்த்தியாக இருக்குமென்று தெரிகிறது.

## பெண்ணில்லா நாடு

தென் அல்பேனியாவில் இருப்பவர் அனைவரும் முகம்மதியர். அங்குப் புதிய சட்டம் ஒன்று இயற்றப்பட்டிருக்கிறது. அச்சட்டப்படி பெண்கள் முகமூடிகளை நீக்கி விடுதல் வேண்டும். முஸ்லீம் ஆண்மக்கள் இதை விரும்பவில்லையாம். அரசாங்கச் சட்டத்தை முஸ்லிம் அனேகவிஷேஷஹும் ஆதரித்துப் பெண்கள் வெளியில் செல்லலாமென்றும் பொதுக்கூட்டங்களில் பேசலாமென்றும் கூறுகிறது. ஆயினும் இச்சீர்திருத்தத்தை விரும்பாத ஆண்மக்கள் பெண்களை வீடுகளில் அடைத்து வைத்திருக்கிறார்களாம். அதனுல் பெண்கள் வெளியில் தலைகாட்டுவது இல்லை.

## அபூர்வமான புத்தகம்

### ஒரே நாளில் உலகில் நடப்பதென்ன?

இதுவரை வெளியிடப்படாத ஓர் அபூர்வமான புத்தகம் இப்பொழுது லெனின் கிராடில் வெளியிடப்பட்டுளது. 'உலகின் ஒருநாள்' என்பது அப்புத்தகத்தின் பெயர். மாக்ஸிம் கோர்க்கி கூறிய யோசனைப்படி அப்புத்தகம் எழுதப்பட்டதாம். 1935-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 27௳ உலக முழுவதும் என்ன நடந்தது என்பது பற்றி அப்புத்தகம் விவரிக்கிறது. 1100 பக்கத்தில் பலரால் அப்புத்தகம் எழுதப்பட்டது.

## எனது நன்றி

எனது தாயார் சமீபத்தில் காலஞ்சென்றதை முன்னிட்டு பல இடங்களிலுள்ள எனது சொந்தக்காரர்களும் நண்பர்களும் தந்திகள் மூலமாயும் கடிதங்கள் மூலமாயும் அவரவர்கள் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டதற்கு ஒவ்வொன்றிற்கும் தனித் தனியே பதில் எழுத முடியாதாகையால் இந்த அன்பான பத்திரிக்கையின் மூலம் அவர்கள் எல்லோருக்கும் எனது பூரண நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

சா. மு. விஸ்வநாதன்,
'விஸ்வநாதன் பாலெஸ்'
காரைக்குடி, முத்துப்பட்டணம்.

# மதிப்புரைகள்

## டால்ஸ்டாய்

[ஆக்கியோர்:— ஆக்கூர் அனந்தாச்சாரியார். பக்கம் 88. விலை அணு 5. தபாற்கூலி வேறு. கிடைக்குமிடம்:— கிட்டப்பா பிரசுராலயம், செங்கோட்டை]

இது ருஷ்ய ஞானி டால்ஸ்டாயின் சரித்திரமாகும். டால்ஸ்டாயின் சரித்திரம் நம் நாட்டு மக்கள் உள்ளத்தைக் கவருமாயின் வாழ்க்கை முறையில் ஒரு புத்தொளி வீசுமென்பதில் ஐயமில்லை. இடர்ப்பட்டு மயங்கிய ரஷ்ய நாட்டின் விடுதலைக்கு டால்ஸ்டாயின் வாழ்க்கை ஒரு முன் வெளிச்சமாய் இருந்ததென்பது குறிப்பிடத் தக்கது. ஆசிரியர் சுருக்கமாகவும், விளக்கமாகவும் இச் சிறு நூலை ஆக்கித் தமிழ் மக்கட்கு நல்கியிருக்கிறார். இதன் முதற் பதிப்பைக் காட்டிலும் பல திருத்தங்கள் இவ்விரண்டாம் பதிப்பில் செய்யப்பட்டுள்ளன.

## டால்ஸ்டாய் சிறுகதைகள்

[ஆக்கியோர்:— ஆக்கூர் அனந்தாச்சாரியார். பக்கம் 114. விலை அணு 6. தபாற்கூலி வேறு. கிடைக்குமிடம்:— கிட்டப்பா பிரசுராலயம், செங்கோட்டை]

டால்ஸ்டாய் எழுதிய நான்கு கதைகள் இதில் அடங்கியுள்ளன. இது ஒரு மொழி பெயர்ப்பு நூலாயினும் நேரே தமிழில் எழுதப்பட்டது போல் இனிமை பயக்கின்றது. நல்ல நடையில் கதைப் போக்கின் சுவை குன்றாமல் அமைந்திருப்பது பாராட்டத் தக்கது. இப் புத்தகம் பள்ளி மாணவரின் படிப்புக்குக் கொண்டுவரப்படுமாயின் எதிர்கால இந்தியா வளம்பெற முடியுமென்று கூற விரும்புகிறோம்.

## எஸ். ஜி. கிட்டப்பா சரித்திரம்

[ஆக்கியோர்:— ஆக்கூர் அனந்தாச்சாரியார். பக்கம் 108. விலை அணு 4. தபாற் கூலி வேறு. கிடைக்குமிடம்:— கிட்டப்பா பிரசுராலயம், செங்கோட்டை]

தமிழநத்தின் நாடகமேடையில் புகழ் பெற்று விளங்கிய கிட்டப்பாவை அறியாத தமிழர் இரார். அவருடைய சரித்திரத்தை வெளியிட்ட அன்பர் அனந்தாச்சாரியாருக்கு நாடகாபிமானிகள் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றனர். ஜனங்களின் உள்ளத்தை எவ்வளவு தூரம் கிட்டப்பா தமது சொற்பகால வாழ்வில் இழுத்திருந்தாரென்பதற்கு இப்புத்தகம் மூன்றாம் பதிப்பாக வெளிவந்திருக்கிறதென்பதே சாட்சியாகும். இப் பதிப்பு திருத்த முற்று அழகுபடுத்தப்பட்டிருக்கிறது. ஸ்ரீமதி. சுந்தராம்பாளின் கடிதங்களும் புதிய படங்களும் இப்பதிப்பில் விளங்குகின்றன.

## வடிவழகி வனஜா

[ஆசிரியர்:- கே. வி.எஸ். வாஸ் B. A. (Hons) பக்கம் 73. விலை அணு 3. தபாற் கூலி வேறு. கிடைக்குமிடம்:— ஸ்ரீ சித்தார்த்த புத்தகசாலை, ஆண்டர்சன் பேட்டை, கோலார் தங்க வயல்]

இது காதலை விளக்கும் ஓர் நவீனம்: காதல் வாழ்வில் கலக்கும் மக்கள் பெறும் இன்ப வர்ணனையாக இப் புத்தகம் திகழ்கிறது. நல்ல நடையில் காதற் சுவை பொன்றாமையே பற்றிக் கதையை ஆசிரியர் முடித்திருக்கிறார்.

## மாதர் மறுமணப் பாடல் திரட்டு

[பாடியோர் பலர்; அளவு கிரௌன் 8. VO. பக்கம் 60; பாடல்கள் 216; விலை இரண்டணு; கிடைக்குமிடம்:— மாதர் மறுமண சகாய சங்கம், காரைக்குடி]

பாடியோர் தொகை பலவாயிருப்பது போல இதில் உள்ள பாடல்களின் வகையும் பலவாயிருக்கின்றன. புதிய துறைப்பாடல்களின் தலைப்பில் 'மெட்டு' வகுத்துக் குறிப்பிட்டிருப்பது பயில்வார்க்கு உதவியளிக்கும் ஒன்று. பதிப்பும் தோற்றமும் பாதகமில்லை. அடுத்த முறை பதிப்பிக்கும்போழ்து ஒரே பாட்டைச் சிதைத்து இருபுறங்களில் போடும் அழகின்மையை ஒழிப்பார்களாக!

வெண்பா, விருத்தம், கலித்துறையாதிய பழவகைப் பாக்களும், கீர்த்தனை முதலான புதுவகைப் பாக்களும் விரவி நிற்றல் பழமையும் புதுமையும் பாந்து இரு திறத்தார்க்கும் இன்பூட்டுவதாகும்.

பாரதிதாஸன் பாடல்கள் பாலொடு தேன் கலந்தன்ன பண்ணொடு கவர்ச்சியும் பாவ இசைகின்றது. நெஞ்சை அள்ளும் செஞ்சொற் கவி; எளிய சொற்கள்; ஆனால் இனிமை தோய்ந்தது. 'காதலைத் தீய்த்த கட்டுப்பாடு' இருக்கின்றதே அது கற்பனையாயினும் உட்புலன் ஈந்த சொற்பூனை வதனால் அற்புதப் பொற்புடை அருங் கவியாய்ச் சுடர்கின்றது.

சுத்தானந்த பாரதியாரின் பாடல்கள் துள்ளிக் குதித்து உணர்ச்சி வெள்ளத்தைக் கொட்டுகின்றன. ஊற்றுப் பெருங்கென்ன உள்ளத்தைப் பொங்குவிக்கின்றன.

காளவனப் புலவர் பாட்டுக்களில் "ராட்டொடு புலம்பல்" நாட்டினர் உள்ளத்திற்கு ஊட்டுதல் உரமென உணர்த்தலே சாலும். சுடலைமுத்துப் பிள்ளையின் "கைம் பெண் துயரம்" கண்டிப்பாய் படித்தே தீரவேண்டும் என்பதே போதும்!

திருச்செந்தூர் மு. கிருஷ்ணசர்மாவின் பாடல்கள் இருபதாம் நூற்றாண்டின் எழுச்சியை எல்லை காண முயல்கின்றன. நாறு போன்ற கனவேகத்தில் கதித்தோடுகின்றன.

இந்நூலில்பாடியவருள்ளே இருபெண் மணிகள் இருப்பது மிகப் பொருத்தமானதுதான். நாட்டில் உள்ள பெண் கல்வி அளவுக்கேற்ப பாடியவருள்ளும் பெண்பாலார் தொகை அமைந்தது போலும்.

எல்லா வகையாலும் புத்தகம் கச்சிதமாய் முடிந்திருக்கின்றது. ஒன்றிரண்டு பாடல்களை இலக்கணப் புலவர் ஏற்றுக் கொள்ள மறுத்தாலும் எண்ணற்ற மக்களின் இதயத்தை அது ஏற்றுக் கொள்ளவும் கூடும்.

பக்கம் அறுபதும், பாடல்கள் இருநூற்றுப் பதினாறும் கொண்ட இப் புத்தகம் இரண்டணுவே விலையிடப்பட்டிருப்பது இயக்கத்திற்கு வலுவூட்டுவதோடன்றி பதிப்புரிமை செய்யப்பட வேண்டிய அவசியத்தையும் போக்கி விட்டது.











## 'காதலுக்குத் தெரியும் காதலின் அருமை'

### காதலருக்கு விண்ட்ஸர் நன்கொடை

போலந்து தேசத்தைச் சேர்ந்த இரு வாலிபக் காதலர்கள் கல்யாணம் செய்துகொண்டு சந்தோஷமாக வாழ முடியுமாறு விண்ட்ஸர் கோமகன் 100 பவுனுக்குச் செக் அனுப்பியிருக்கிறார். வியன்னு சர்வகலாசாலையில் படிப்பை முடித்த டாக்டர் நார்ஸல் ஸ்டானிஸ்லாவில் வசிக்கும் ஒரு அழகான பெண்ணிடம் காதல் கொண்டார். ஆனல் ஏழ்மை காரணமாக அவர்கள் கலியாணம் செய்துகொள்ள முடியவில்லை. 10 தினங்களுக்கு முன் அவர்கள் விண்ட்ஸர் கோமகனுக்குப்பாராட்டுதல் கடிதமொன்றெழுதி அதில் தங்கள் நிலைமையையும் தெரிவித்திருந்தார். அவர்கள் ஆச்சரியப்படுமாறு 100 பவுனுக்குச் 'செக்' வந்துவிட்டது. கலியாணம் சீக்கிரம் நடக்கும்.

### காதல்! காதல்!

காதல் போயிற் சாதல்! சாதல்!

நாகபுரியைச் சேர்ந்த ஒரு வாலிபன். இளம்வயது. உயர்ந்த பிராம்மண குடும்பத்தைச்சேர்ந்த ஒரு மங்கை. ஒருவரை ஒருவர் பெரிதும் காதலித்தனர். இன்ப வாழ்க்கை நடத்த விரும்பினர். ஆனல் சமூகமும் பெற்றோரும் இடங்கொடுக்கவில்லை. எனவே அவர்கள் வீட்டை விட்டு மண்ட்லா நகரத்திற்கு வந்து தங்கினர்கள். போலீஸார் இவர்களைச் சந்தேகித்து ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்று பல கேள்விகள் கேட்டனர். பிறகு விடுவிக்கப்பட்டனர். ஆனல் காதலர்கள் நிம்மதியாக இருக்க முடியவில்லை. மேலும் பல தொந்தரவுகள் ஏற்படுமென்று கருதி காதலரிருவரும் ஒருவரை யொருவர் அணைத்த வண்ணம் நர்மதா நதியில் விழுந்து இறந்தனர். நதிக்கரையில் அவர்கள் ஒரு கடிதம் எழுதிவைத்திருந்தனர். தங்கள் வாழ்க்கை லட்சியம் பூர்த்தியாகி விட்டதாக அதில் எழுதியிருந்தார்கள்.

### அபிஸீனிய அரசரின் சொத்துரிமை

கோர்ட்டில் வழக்கு

பிரஞ்சு அபிஸீனிய ரயில்வே கம்பெனியின் பங்குகளில் தமக்குள்ள பாத்தியதையை ஸ்தாபிக்க அபிஸீனிய அரசர் ஒரு பிரஞ்சுக் கோர்ட்டில் வாதாடப் போகிறார். அந்தப்பங்குகள் மான்லிக் சக்கரவர்த்திக்கு அளிக்கப்பட்டன. அவை அபிஸீனிய கவர்மெண்டின் பேரிலிருக்கின்றன. நெகஸிடமுள்ள பங்குகளை விற்கவோ வாங்கவோ மாற்றவோ கூடாதென்று இத்தாலிய கவர்மெண்டு இருமுறை பாரிஸிலுள்ள ரயில்வே தலைமையாபீசில் ஆட்சேபித்திருக்கிறது. அபிஸீனியா முழுவதும் இப்போது இத்தாலியர் வசமிருப்பதாயும், முன்பு நெகஸ் சக்கரவர்த்தியாக இருந்து வகித்த உரிமைகளை யெல்லாம் இப்போது இத்தாலியே வகிப்பதாயும் இத்தாலி கவர்மெண்டு கூறுகிறது. ரெயில்வேக் கம்பெனி பிரஞ்சுக் கம்பெனி யென்றும், பிரஞ்சு கவர்மெண்டு தமது கவர்மெண்டையே சரியான அபிஸீனிய கவர்மெண்டாக அங்கீகரிப்பதாகவும் ஆகவே ரயில்வேப் பத்திரங்கள் தமக்கே சொந்தமென்றும் அபிஸீனிய அரசர் வாதிக்கிறார். இந்தப் பங்குகளின் மதிப்பு 3 லட்சம் பவுன்

### வார்தாக் கூட்டம்

சட்டசபைக் கட்சித் தலைவர்கட்கு அழைப்பு

வார்தாவில் நடைபெற விருக்கும் காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்திற்கு வருமாறு சட்டசபைகளிலுள்ள காங்கிரஸ் கட்சித் தலைவர்கட்கு அழைப்பு அனுப்பப்படுமென்று தெரிகிறது.

## அபிஸீனிய அபிவிருத்தித் திட்டம்

### 1200 கோடி லயர் செலவழிக்கப்படும்

ரோம், ஜூன், 21—

அபிஸீனியாவின் அபிவிருத்திக்காக ஸீனர் முஸோலினி ஒரு 6 வருஷத் திட்டத்தைத் தயாரித்திருக்கிறார். இதை நிறைவேற்றி வைக்க 1200 கோடி லயராகும். இத் திட்டத்தை மந்திரி சபை அங்கீகரித்துவிட்டது.

இத்தாலியரை அபிஸீனியாவில் குடியேறச் செய்யும் திட்டத்தின் விவரங்கள் ரோமாபுரியிலும், அடிஸ் அபாபாவிலும் தயாரிக்கப்பட்டு வருகின்றன. இத்தாலியக் கிருஷிகர்கள் அதிகமாய் அனுமதிக்கப் படுவார்கள். சீதோஷ்ணத்துக்கு அனுகூலமாக முதல்தரமான வீடுகளை இத்தாலியருக்கு அமைத்துக் கொடுக்கும் வேலை முதலில் கவனிக்கப்படும். ஹெய்லிஸெலாஸிக்குச் சொந்தமாயிருந்த நிலங்கள் இத்தாலியருக்குப் பகிர்ந்து கொடுக்கப்படும்.

10,000 வர்த்தக ஸ்தாபனங்கள் அபிஸீனியாவின் அபிவிருத்திக்காக மனுப் போட்டிருக்கின்றன. ஆனல், 675 பெரிய வர்த்தக ஸ்தாபனங்களும், 333 தொழில் ஸ்தாபனங்களும்தான் அனுமதிக்கப்படும். ரோடுகளை அமைக்கும் வேலை, கனிவர்க்கங்களைக் கண்டுபிடித்து நடத்துவது, பெரிய தொழிற்சாலைகளையும், பண்ணைகளையும் ஆரம்பித்து நடத்துவது முதலியவை திட்டத்தில் முக்கியமானவையாகும்.

ஜெர்மனி, ஜப்பான், ஆஸ்ட்ரியா போன்ற தேசங்களுக்கும் முக்கியமான சலுகைகள் அளிக்கப்படும்.

### மலேயாவுக்குத் தொழிலாளர்

தொகை அதிகரிக்கிறது

தென்னிந்தியாவிலிருந்து மலேயாவுக்கு இப்போது ஏராளமாகக் குடியேற ஆரம்பித்திருக்கிறார்கள். குடியேறும் ஜனங்களின் தொகை இப்பொழுது நாளுக்குநாள் அதிகரித்துவருகிறது. இவர்களில் பெரும்பாலோர் தொழிலாளர்கள். இவர்கள் மலாய் நாட்டுசர்க்காரால் நாகையிலும் சென்னையிலும் ஏற்படுத்தப்பட்டிருக்கும் டெப்போக்களின் மூலமாக உதவிபெற்றுக் கொண்டு குடியேற முதலில் பிரயத்தனம் செய்துகொண்டிருக்கிறார்கள். இவர்களில் சிறுபாலரே இவைகளால் உதவியளிக்கப்பெறுகிறார்களாகையால் பாக்கிப்பேர்கள் தங்கள் சொந்தச்செலவில் மலாய்நாட்டுக்கு வேலை செய்வதன் பொருட்டுக் கப்பல் மூலமாய்ப் பிரயாணமாகிறார்கள். ஜூன் 19-உ சாயங்காலம் நாகையிலிருந்து மலேயாவுக்குப் பிரயாணமான ரஜுலா என்ற கப்பலில் சென்னையிலிருந்து சுமார் 960 உதவி பெற்ற தொழிலாளர்களும், 350 பிரயாணிகளும், மத்தியத் துறைமுகங்களிலிருந்து சுமார் 250 பிரயாணிகளும், நாகப்பட்டணத்திலிருந்து சுமார் 900 பிரயாணிகளும், 345 உதவிபெற்றுப் போகும் தொழிலாளர்களும் மலேயாவுக்குச் சென்றனர். கப்பலில் இடமில்லாததால் சுமார் 2100 பிரயாணிகள் இவ்வூரில் நிறுத்தப்பட்டிருக்கின்றனர்.

## வைசிராயின்முன்னுரை

### அரசியல் அதிர்ச்சி கூடாது

வைசிராய் லார்டு லின்லித்கோ, இந்த "தேசத்துக்கு" விடுக்கும் செய்தியைப்பற்றி முன்னுரையாக (திங்கட்கிழமை) மாலையில் ரேடியோ மூலம் பின்வருமாறு பேசினர்:—

"நான் (நாளை செவ்வாய்க்கிழமையன்று) இந்தியாவுக்கு ஒரு செய்தி விடுக்கிறேன். இன்றிரவு அதைப்பற்றி உங்கள் ஒவ்வொருவரிடமும் ஒரு வார்த்தை.

"அரசியல் தத்துவம் பற்றிய நிலைமை, அதுபற்றி இந்தியாவின் பல பாகங்களிலும் பல கட்சிகளிடையேயுமிருக்கும் சந்தேகங்கள் இவையாவும் உங்களுக்குத் தெரியும். இந்த முக்கியமான பிரச்னைகள் பற்றி நடந்துவரும் விவாதங்களையும் பொது வாழ்விலுள்ளவர்களின் பிரசங்கங்கள் மூலமும் பத்திரிகை அபிப்பிராயங்கள் மூலமும் இப்போது தேசத்தில் பரவிவரும் அபிப்பிராயங்களையும் நான் கவலையுடன், நேசப்பான்மையுடன் பக்ஷபாதமற்ற மனப்பான்மையுடன் கவனித்து வந்திருக்கிறேன். அரசியல் நிலைமையில் இன்னும் ஏதேனும் கஷ்டங்களிருக்குமாயின் அதற்கு காரணம் சில தப்பபிப்ராயங்களே யாகும். ஆகையால் பான்பாம் நல்லெண்ண மிருக்குமாயின் இந்த தப்பபிப்ராயங்களை ஆராய்ந்து பார்த்து அகற்றிவிட முடியும்.

நான் விடுக்கும் செய்தியில் இப்போது உடனே தீர்க்கப்பட வேண்டியதாக நம் முன்னிலையிலுள்ள பிரச்னைகளைப்பற்றி சர்க்காரின் சார்பாக உத்யோக தோரணையில் நிலைமையை விளக்க முயற்சித் திருக்கிறேன்.

இவ்வாறு நிலைமை தெளிவுபட விளக்கப்படுவதால், இப்போது மிக முக்கியமான ஒரு விஷயத்தில், உங்கள் ஒவ்வொருவரின் க்ஷேமலாபத்துக்கும் உங்கள் தேசத்தின் க்ஷேமலாபத்துக்கும் முக்கியமான ஒரு பிரச்னையைப்பற்றி சரியான முடிவுக்கு வருவதற்கு நான் உதவி செய்வதாக நம்புகிறேன்.

நீங்கள் ஒரு முடிவுக்கு வருமுன் பிரச்னையின் சட்ட ரீதியான அம்சங்களை மட்டும் கவனித்தால் போதாது. புது அரசியல் மூலம் ஏற்படும் சீர்திருத்தத்தைப்பற்றிய கருத்து, இப்போது இந்தியாவிலுள்ள நிலைமை, சென்ற 18 வருஷத்திய அரசியல் வளர்ச்சியின்போக்கு முதலியவற்றையும் கவனிக்கவேண்டும்.

"இந்த முக்கியமான சந்தர்ப்பத்தில் நாட்டின் அரசியல் சீர்திருத்தத்தின் போக்கில் திடீரென்று எவ்வித அதிர்ச்சியும்-சிறிது காலத்துக்கு கூட-ஏற்படாமலிருப்பதே நல்லது என்பதையும் நீங்கள் கருத்தில் கொள்ளவேண்டும். நுசுச் செய்யப்பட்ட மிகவும் முக்கியமான தெளிவான, காரணமின்றி அரசியல் போக்கில் அதிர்ச்சி ஏற்படுத்துவது புத்தித் தாழ்வான காரியமென்பதை. நீங்கள் கருத்தில் கொள்ளவேண்டும்"

புதுக்கோட்டை மகாராஜாவின் பிறந்தினக் கொண்டாட்டம் ஜூலை 6உ நடைபெறும். தற்பொழுது மன்னர் கொடைக்கானலிலிருக்கிறார். ஜூலை 2உ புதுக்கோட்டை வருவார்.

## காந்தி—வைஸ்ராய் சந்திப்பா?

### வைஸ்ராய் செய்தி வெளியிடு முன் நடந்ததென்ன?

அமிருத பஜார் பத்திரிகையின் நிருபர் ஒரு வதந்தியை வெளியிட்டிருக்கிறார். வைஸ்ராய் தமது செய்தியை வெளியிடு முன்பு சென்னை கவர்னரின் மூலம் ஸ்ரீ. ராஜகோபாலாச்சாரியாரின் அபிப்பிராயத்தை அறிந்துகொண்டதாகவும், திரு. ஆச்சாரியாரோ, காந்திஜியோ அல்லது இருவருமோ ராஜப்பிரதிநிதியின் செய்தி மிகுந்த மனமாறுதலைக் காட்டுவதாகவும், சில சில்லரை அம்சங்களிலேயே தெளிவேற்பட வேண்டுமென்றும் குறித்த அறிக்கையொன்று வெளியிட வேண்டுமென முன்னதாகவே இவர்களுக்குள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததென்றும் வதந்தியிருப்பதாக அந்நிருபர் கூறுகிறார்.

சந்தேகமுள்ள அம்சங்களைப்பற்றி தெளிவடைய காந்திஜியை லார்டு லின்லித்கோ கண்டு பேசுவாரென்றும் இச் சந்திப்பு காரியக் கமிட்டிக் கூட்டத்திற்கு முந்தியா பிந்தியா என்று இன்னும் தெரியவில்லையென்றும் அச் செய்தி கூறுகிறது.

### "நான் காங்கிரசுக்குப் பெரிய நண்பன்"

ஸ்ரீமான் எம். ஸி. ராஜாவின் பிரசங்கம்

சென்னை, ஜூன் 22—

"புதிய சீர்திருத்தத்தை நடத்த முன்வரும் எந்தக் கக்ஷியுடனும் எனது கக்ஷியார் ஒத்துழைக்கத் தயாராக விருக்கிறார்கள். நான் காங்கிரஸ் கக்ஷிக்குப் பெரிய நண்பனாக விருந்தேன். காங்கிரஸ் கக்ஷியினர் என்னையும் இதர இடைக்கால மந்திரிகளையும் தாக்கிப்பேசி வருவதின் காரணமின்னதென்று எனக்குப் புலப்படவில்லை. காங்கிரஸ் கக்ஷியார் சர்க்காருடன் ஒருவித சமரசத்துக்கு வந்து மந்திரிப்பதவி யேற்று சீர்திருத்தத்தை நடத்த ஒரு சந்தர்ப்பமளிப்பதற்குத் தான் நாங்கள் இடைக்கால மந்திரி ஸ்தானங்களில் அமர்ந்திருக்கிறோம். எந்தக் கக்ஷியாவது சீர்திருத்தத்தை அமுல் நடத்த வேண்டுமென்று கவர்ன்மெண்டைக் கிட்டுமானல் அதற்குச் சர்க்கார் உதவியளிக்காதிருக்க முடியாது. அத்தகைய கக்ஷிகளின்மேல் காங்கிரஸ்கார் கண்டபடி வசைச் சொற்களைப் பிரயோகிப்பானேன். சட்டசபைகளில் காங்கிரசுக்கு மெஜாரிட்டி யிருக்கிறது என்பது சந்தேகமறத்தெரிந்த விஷயம். ஆனல் காங்கிரஸ்கார் சர்க்காருடன் சமாசத்துக்கு வந்து ஜனங்களைத் திருப்திப்படுத்த அவர்களுக்கு நாங்கள் ஒரு சந்தர்ப்பமளித்து வருகிறோம் என்பது கவனிக்கத்தக்கது. இடைக்கால மந்திரிகள் மீது புகார் கூறுவதால் எவ்வித பிரயோஜனமுமில்லை. எங்களுடைய கட்சிக் கொள்கைகளின்படி நாங்கள் வேலை செய்து வருகிறோம்" என்று நேற்று மாலை மாம்பலத்திலுள்ள ஸ்ரீ. நாராயண மிஷன் கட்டிடத்தில் நடந்த கூட்டத்தில் அபிவிருத்தி மந்திரியான ஸ்ரீமான் எம். ஸி. ராஜா கூறினர்.

### ஒரிஸா கவர்னர் மனோபாவம்

கட்டாக், ஜூன் 19—

தற்போதுள்ள மந்திரிசபை மீது ஜனப்பிரதிநிதி சபையில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவந்து நிறைவேற்றப்பட்டபோதிலும் கவர்னர் தற்போதைய நிலைமையில் மந்திரி சபையைக் கலைக்க விருப்பமில்லாதவராக இருப்பதாக நம்பத்தகுந்த இடத்திலிருந்து தெரிகிறது.

## பர்மாவிலுள்ள சந்தாதார்கட்கு.

பர்மாப் பிரிவினையின் பயனாக பத்திரிகைக்குத் தபாற்கட்டணம் ஒன்றுக்கு மூன்றாக ஏற்றப்பட்டிருக்கிறது. ஆதலால் ஏப்ரல் 1உயிலிருந்து சந்தா ரூ. 7. ஆக உயர்த்தப்பட்டிருக்கிறது.

மானேஜர்,
குமரன் ஆபீஸ்,
காரைக்குடி.


# குமரன்

காரைக்குடி
ஈஸ்வர-ஹு ஆனி-மீ 11உ


## வைசிராய் அறிக்கை

இந்திய வைசிராய் லார்டு லின்லித்கோ தமது அறிக்கையை வெளியிட்டுவிட்டார். அவ்வறிக்கையை வரவேற்க முன்னறிவிப்பாக ரேடியோவில் ஒரு பிரசங்கமும் செய்தார். எங்கும் உரிய காலத்தில் பொது ஜனங்கட்குப் பாவ வேண்டிய முயற்சியும் எடுத்துக்கொள்ளப்பட்டது. இவ்வறிக்கையிலுள்ள விஷயங்கள் மூன்றுமாதங்கட்கு முன்பு வெளியாகியிருக்குமானால் விசேஷமான பெருமையிருந்திருக்கும். அல்லது மகாத்மாவைச் சந்தித்து இவ்விஷயத்தை உள்ளன்புடன் கூறியிருந்தால் அவருடைய கருணை நிறைந்த பெரிய மனத்தில்பட்டுச் சிறந்த பயனை உண்டாக்கியிருக்கும். இவ்வறிக்கையானது காலங்கடந்து வெளிவந்திருப்பதால் இதன் தன்மை அலசிப்பார்த்து ஆய்ந்து முடிவு கட்டும்படியான துர்ப்பாக்கியத்தைப் பெறவேண்டியதாக இருக்கிறது.

அறிக்கையானது வெகு நயமான போக்கில் விளங்குவது குறிப்பிடத்தக்கது. அதிகார வர்க்கத்தினரின் ஆணவ மொழிகள் அதில் காணப்படவில்லை. காங்கிரசுடன் ஒத்துழைத்து சீர்திருத்தத்தை நடைபெறச் செய்ய வேண்டுமென்றதாகவுள்ளபடியே இருப்பதாக அறிக்கை அமைந்திருக்கிறது. சட்டசபைகளைக் கலைத்து மறு தேர்தலை யுண்டாக்குவதில் அரசாங்கத்தாருக்கு அச்சமிருப்பது இயல்பல்லவா? காங்கிரசை எதிர்ப்பதாகவோ அலட்சியப் படுத்துவதாகவோ அறிக்கை இல்லை யென்பது முக்கியமான விஷயமாகும்.

மகாத்மா இதைப் பற்றிக் கூறும்போதே "சட்டத்தினால் பாதுகாக்கப்பட்ட இந்த உரிமைகளை விட்டுக்கொடுக்கும்படி கேட்பது நான் கேட்கும் வாக்குறுதியில் சேரவில்லை" என்று குறிப்பிட்டிருக்கிறார். தவிர "சட்டத்திலுள்ள பிற்போக்குகளெல்லாம் இந்த சட்டம் அமுலிலிருக்கிறவரை இருக்கத்தான் செய்யுமென்பதை யறிந்தே காங்கிரஸ் மந்திரி பதவி ஏற்கும்" என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இவைகளிலிருந்து மந்திரி பதவி ஏற்பதிலுள்ள கஷ்டமெல்லாம் சட்டசபையின் முடிவை கவர்னர் தமது விசேஷ அதிகாரங்கொண்டு நிராகரிப்பரானால் காங்கிரஸ் கட்சியார் முயற்சிகள் பலனளிக்காதென்பதுதான் குறிப்பிடத்தக்க விஷயமாக இருக்கிறது. இதில் இரு கட்சியாருக்கும் சந்தேகம் பலப்பட்டிருக்கிறது. முக்கியமான சந்தர்ப்பங்களில் இந்த விசேஷ அதிகாரம் ஜனங்களைப்பலமுறை வெறுப்படையும்படி பிரயோகிக்கப் பட்டிருக்கிறது. இனி அப்படிச் செய்யப்பட மாட்டாதென்பதற்கு வைசிராயின் அறிக்கையில் ஓரளவு திருப்திகரமாகவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அபாயகரமான தீர்மானங்களை சட்டசபை மெஜாரிட்டி தீர்மானிக்குமானால் நிராகரிக்க ஓரளவு அதிகாரம் கவர்னருக்கு வேண்டுமென்பதை மகாத்மாவும் ஒப்புக்கொள்கிறார். எல்லா விஷயத்திலும் கவர்னரின் விசேஷாதிகாரம் பிரயோகிக்கப்பட மாட்டாதென்று வைசிராய் கூறுகிறார். விஷயம் ஏதோ பேச்சு எழுத்துக்களில் ஒத்துப் போய்விட்டது. ஆனால் செயல் முறையில் இருகட்சியாரும் சரியாக ஒருவருக்கொருவர் திருப்திப்படும் படியாக நடக்கமுடியுமா வென்பதே இனிபாக்கியிருக்கிற விஷயமாகும்.

சீர்திருத்தமோ மரக்குதிரை. சட்டசபை மெஜாரிட்டி காட்சியாருக்கு திருப்தியற்றது. இதற்குமேல் சட்டமியற்ற ஆள்வோருக்கு விருப்பமில்லை. இதை நடத்திக் கொடுப்பதில் இருவரும் பரஸ்பரம் திருப்தியும் நல்லெண்ணமுங் கொள்ள வேண்டிய நிலை வந்திருக்கிறது. சீர்திருத்தத்தை நன்றாக நடத்திப் பயன்பெற இஷ்டப்பட்டால் வைசிராயின் அறிக்கை போதுமானதென்பதே நமது அபிப்பிராயம். நடத்திப்பார்த்து கவர்னர்களின் நடவடிக்கை ஒவ்வாதுபோமானால் 'ராஜீநாமாவோ டிஸ்மிஸ்ஸோ' சந்தர்ப்பம்போல் பார்த்துக்கொள்ளலாம். பெய்ஸ்பூர் தீர்மானப்படி முட்டுக்கட்டை போடுவதே நோக்கமாயின் ஒரேயடியாக இந்நிலையிலேயே எதிர்ப்பைத் தொடங்க வேண்டியதுதான். ஜூலை 5உ கூடும் காரியக்கமிட்டியில் தீர்மானம் என்னவாகிற தென்பதை எதிர்பார்க்கலாம்.

## கூடல்மாணிக்கம் கோவிலில் சத்யாக்ரகம்?

### ஸ்ரீ. கைமாலுக்குக் கடிதம்

திருச்சூர், ஜூன் 18—

திருச்சூரில் வெளியாகும் "ஸ்நேகிதன்" பத்திரிகை ஆசிரியர் சங்கரனும் சித்தூர் ஜில்லா கைலாசநாத மடத்தலைவர் ஸ்வாமி நாராயண ஜீயும் கூடல் மாணிக்கம் கோவில் தர்மகர்த்தாவான ஸ்ரீ. தச்சுதயகைமாலுக்கு ஜூன் 13உ யன்று ஒரு கடிதம் எழுதியுள்ளனர்,

அதில் கூடல்மாணிக்கம் கோவிலில் ஹரிஜனங்கள் உள்பட சகலரையும் அனுமதிக்க வேண்டுமென்றும் இல்லாவிடில் இந்தக் கடிதம் அனுப்பிக்கப்பட்ட தேதி முதல் இரண்டு மாதத்திற்கப்புறம் சத்யாக்ரகம் ஆரம்பிக்கப்படுமென்றும் வணக்கமாகத் தெரிவித்துக் கொண்டிருக்கின்றனர்.

## கல்விக்குப் பொதுமக்கள் உதவி

மதீனா பத்திரிகையில் பின் கண்ட செய்தி காணப்படுகிறது:—

துருக்கிப் பார்லிமெண்டில் கல்வி மந்திரி ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் துருக்கி நாட்டிலுள்ள பாடசாலைகளுக்கு துருக்கிப் பொது ஜனங்கள் 12043247 பவுன் பெறுமானமுள்ள சொத்தைக்கொண்டு தங்கள் சர்க்காருக்கு ஒத்தாசை செய்திருப்பதாகக் குறிப்பிட்டார். மேலும் அவர், எதிர்காலத்தில் இதைவிட அதிக ஒத்தாசைக்கு நம்பிக்கை இருந்து வருவதாயும் கூறினார்.

### துருக்கி வருமானம்

துருக்கி பொக்கிஷ மந்திரி 1936-ல் உள்ள 9 மாதக் கணக்கை வெளியிட்டுள்ளார். அதிலிருந்து 9 மாத காலத்திற்குள் சர்க்காருக்கு கிடைத்துள்ள வருமானம் 180190713 பவுன் என்றும், 1935-வது வருஷ வருமானத்தைவிட 1936-ல் துருக்கிக்கு 14360228 பவுன் வருமானம் அதிகரித்திருக்கிறதென்றும் தெரிய வருகிறது.

## கல்விசபை மெம்பர்கள்

இராமநாதபுரம் ஜில்லா கல்வி சபைக்கு ஸ்ரீமான்கள், ராவ்பகதூர் ராமசுந்திரம் பிள்ளையும், அர்ச்கோமசும் மெம்பர்களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

## பத்திரிகைக் காகித விலை

### 100க்கு 100 உயர்வு

சிம்லா, ஜூன் 4—

பத்திரிகை அச்சடிக்கும் காகிதங்கள் இறக்குமதிபற்றி இந்திய சர்க்கார் புள்ளி விபரங்கள் திரட்டி வருவதாகத் தெரிகிறது.

சென்ற மூன்று மாதங்களில் 100-க்கு 100 விலை அதிகமாகி இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.

பத்திரிகை ஸ்தாபனங்கள் தாமதமில்லாது முன் ஆர்டர் செய்யவேண்டியிருப்பதால், நிலைமை நெருக்கடியாக இருக்கிறது.

ஏப்ரல் மாதத்து வர்த்தகப்புள்ளி விவரங்கள், செய்திப் பிரசுரக் காகித இறக்குமதி குறைந்து வருவதாகக் காண்பிக்கிறது.

விலை உயர்ந்திருப்பதால் பத்திரிகைகள் காகிதம் வாங்குவதை கட்டுப்படுத்திக் கொள்ள நிலை ஏற்பட்டிருக்கிறது என்பதை இது தெளிவாக எடுத்துக் காண்பிக்கிறது.

பல பத்திரிகைகள் தினசரி பிரசுரத்தில் பக்கங்களைக் குறைக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டிருப்பது யாவரும் அறிந்ததே.

இந்த விபரீதமான நிலைக்கு மற்றொரு சான்று உளது. 1935-ம் வருஷத்துடன் ஒப்பிட்டால், இந்த வருஷம் ஏப்ரலில் மட்டிலும் இறக்குமதி வரி வருமானம் ரூ. 50,000 வரை உயர்ந்திருக்கிறது. 1937-38 பட்ஜட் எஸ்டிமேட்படி பத்திரிகை பிரசுரக் காகிதத்தில் இருந்து ரூ. 21 லட்சமே எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் ஏப்ரலில் மட்டும் ரூ. 212641 கிடைத்திருக்கிறது.

### இறக்குமதி வரி குறைக்க

இந்த அதிகப்படியான வருமானம் காகித விலை உயர்வினால் கிடைத்திருக்கிறது. ஆகையால் அப்போதைய விலை மீது விதிக்கும் விகிதத்தைக் குறைத்தோ அல்லது சாதாரண விலையை ஆதாரமாக வைத்து வரி விகிதத்தை நிர்ணயித்தோ, இந்திய சர்க்கார் சுங்க வரியை மாற்றியமைக்கவேண்டும் என்று ஸ்தாபனங்கள் கேட்பது நியாயமே.

பத்திரிகைகள் சுங்க வரியை குறைக்க வேண்டும் என்று விரும்புவதற்கு எதிராக சிலர் சுய காரியத்தை உத்தேசித்து பிரசாரஞ் செய்ய ஆரம்பித்துவிட்டனர் என்பது ஆச்சரியமாக இருக்கிறது. அவர்கள் வாதம் வருமாறு:—

### விசித்திரப் பிரசாரம்

(1) பத்திரிகைகளுக்கு உதவியளிக்கப்பட்டால், இதர ஸ்தாபனங்களும் தங்களுக்குவேண்டிய பொருள்களைப்பற்றிக் கேட்க முன்வருவார்களாம்; (2) இறக்குமதி வரி குறைப்பதால் உள்நாட்டு உற்பத்தி பாதிக்கப்படுமாம்; (3) இப்பொழுது பத்திரிகைகள் அதிக வருமானம் அடைந்து வருகின்றனவாம்.

### உண்மை நிலை என்ன?

இக் கூற்றுகள் யாவும் நடைமுறை உண்மைக்கு மாறானவை. சர்க்காருக்கு முன் எச்சரிக்கை செய்வது அவசியம்.

1. திடீரென்று விலை உயர்ந்து விட்டது; சர்க்காரும் இதை எதிர்பார்க்கவில்லை. ஆகையால் பத்திரிகைப் பிரசுரக் காகிதத்தின் நிலை ஒரு தனி அளவில் இருக்கிறது.

2. தற்போது உள்நாட்டில் பிரசுரக் காகிதங்கள் தயாரிக்கப்படவில்லை. சுங்க வரி குறைப்பதால், உள்நாட்டு காகிதத் தொழில் எவ்விதத்திலும் பாதிக்கப்படாது. இன்னும், வருங்கால பிரசுரக் காகித உற்பத்திக்கும் இது எவ்விதத்திலும் பாதகம் விளைவிக்காது.

3. பத்திரிகை உற்பத்திச் செலவு அதிகரிப்பதால்—லாபம் வேண்டாம்—நானாவட்டச் செலவிற்கே அவசியமான வருமானம் கிடைப்பதில்லை என்பதை இந்தியப் பத்திரிகைத் தொழிலில் அனுபவமுள்ள யாரும் மறுக்க மாட்டார்கள்.

மிகவும் முக்கியமாக கவனிக்க வேண்டிய தென்னவெனில் பத்திரிகைகள் தேசத்திற்கு மிகவும் முக்கியமான ஒரு வேலையைச் செய்து வருகின்றன. சந்தர்ப்ப விசேஷங்களால் காகித விலை உயர்ந்திருப்பதற்காக அது தண்டிக்கப்படலாகாது.

இந்தியப் பத்திரிகை முதலாளிகள் தூது கோஷ்டியாகச் சென்று விபரங்களை இந்திய சர்க்கார் முன் சமர்ப்பிப்பார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. —சுதந்தரன்.

## "உறுதிமொழியை வற்புறுத்துவது வீண்"

### எம். என். ராய் தீர்மானம்

பம்பாய், ஜூன் 17—

ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டியின் நிர்வாகசபையின் அடுத்த கூட்டம் சமீபத்தில் நடைபெறும். அதில் திரு. எம் என். ராய் ஒரு தீர்மானத்தைக் கொண்டுவரப்போவதாக நோட்டீஸ் கொடுத்திருக்கிறார். இடைக்கால மந்திரி சபையினரை அதிகார பதவியிலிருந்து தூக்கிய பிறகு கவர்னர்கள் பெரும்பான்மைக் கட்சியினரை மந்திரி சபையை அமைக்கும்படிக் கேட்டுக் கொண்டால் அப்போது பதவி ஏற்கும்படி பெரும்பான்மைக் கட்சித் தலைவருக்கு உத்தரவிடப்படவேண்டுமென்று ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டி அபிப்பிராயப்படுகிறது; இதற்கு உறுதிமொழியளிக்கவேண்டுமென்று வற்புறுத்துவதில் பலனெதுவும் ஏற்படாதென்பதே காரணமாகும்" என்பது இத்தீர்மானத்தின் கருத்தாகும். தீர்மானத்தின் வாசகம் பின்வருமாறு இருக்கிறது:—

பெய்ஸ்பூர் தீர்மானத்தை வாபீஸ் பெற்றாலொழிய காங்கிரஸ் கோரிய உறுதிமொழி கொடுக்கப்பட மாட்டாதென்பது லார்டு ஜெட்லண்டின் பிரசங்கத்தால் தெளிவாகத் தெரிகிறது. காங்கிரஸ் பெய்ஸ்பூர் தீர்மானத்தை வாபீஸ் வாங்குவதென்பது முடியாது. இதனால் காங்கிரஸ் சம்பிரதாயமான உறுதிமொழியைக் கொடுக்க வேண்டுமென வற்புறுத்தினால் அரசியல் சட்ட அமுல் நிறுத்திவைக்கப்படக் கூடும். அதனால் ஏற்படக்கூடிய நிலைமையைச் சமாளிக்க காங்கிரஸ் தயாராக இல்லை. மேலும் டில்லி தீர்மானத்தின்படி கோரப்படும் உறுதிமொழியை இந்தியா மந்திரியும் கவர்னர்களும் ஏறக்குறைய மறைமுகமாகக் கொடுத்து விட்டார்கள். இதனால் காங்கிரஸ் பெய்ஸ்பூர் தீர்மானத்தையும் காரியக் கமிட்டியின் பல தீர்மானங்களையும் அமுலுக்குக் கொண்டு வருவதற்காக நிர்வாகத்தைக் காங்கிரஸ் மேற்கொள்ள வேண்டும்"

## காளையார்கோவில் கிராமக் கைத்தொழிற்சாலை

### திறப்புவிழா நடைபெற்றது

காளையார்கோவில், ஜூன் 16—

இவ்வூர் ஸ்ரீ. ராமகிருஷ்ண பரமஹம்சர் வாசகசாலையின் மேல்மாடியில், மேற்படி கைத்தொழிற்சாலையின் ஆரம்பவிழா நடைபெற்றது. ஸ்ரீமதி விசாலாக்ஷியம்மாள் தலைமை வகித்தார். ஸ்ரீ. சொக்கலிங்கஞ் செட்டியார், கைத்தொழிற்சாலையைத் திறந்துவைத்தார். அவருக்கு ஓர் உபசாரப் பத்திரம் அளிக்கப்பட்டது.

ஸ்ரீ. செட்டியார் கைத்தொழிற்சாலையின் அவசியத்தைப்பற்றியும், அதனால் தேசத்துக்கு ஏற்படக்கூடிய நன்மைகளைப்பற்றியும் விரிவாக ஓர் சொற்பொழிவாற்றினர்.

சிவகெங்கை ஸ்ரீ சேதுராமனும், தலைமைவகித்த ஸ்ரீமதி விசாலாட்சியம்மாளும், தொழிற்சாலையின் முக்கியம் அதனால் ஏழைகள் அடையக்கூடிய நன்மைகள் ஆகியவைகளைப்பற்றி சுமார் 1 மணி நேரம் பேசினார்கள். தொழிற்சாலை நிர்வாகஸ்தர் ஸ்ரீ. மு. ராமசாமியால் வந்தனம் கூறப்பட்டு விழா முடிவடைந்தது.

## விடுதலைப் பத்திரிகை.

இப்பத்திரிகை சொந்தக்காரர் ஸ்ரீமான் ஈ. வி. கிருஷ்ணசாமி நாயக்கர் ஜில்லா மாஜிஸ்டிரேட் கேட்டபடி ரூ. 1000 ஜாமீன் கட்டிவிட்டார். பத்திரிகை ஈரோட்டில் உண்மை விளக்கம் அச்சுக்கூடத்தில் பிரசுரிக்கப்படும்.—



## நகரவேலன்குடி கும்பாபிஷேகம்

ஆனி-மீ 5உ வெள்ளிக்கிழமை பகல் 12-க்கு மேல் 1½ மணி அளவில் கோட்டையூரை யடுத்த நகரவேலன் குடிக் கும்பாபிஷேகம் வேலன்குடி நகரத்தார்களால் சிறப்பாக நடத்தி வைக்கப்பட்டது.

கூட்டம் சுமார் 60 ஆயிரத்துக்கு மேல் இருக்குமென்று தெரிகிறது. செட்டிமார் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் ஜனங்கள் வந்திருந்தனர். மத்தியானமும், இரவும் நகரத்தார் நாட்டார்களுக்குத் தனித்தனியாக சாப்பாட்டு வசதி செய்யப்பட்டிருந்தது. சுமார் 10 ஆயிரத்துக்கு மேலாகவே தனவணிக பெண் மக்கள் விஜயஞ் செய்திருந்தனர்.

திருவீழிமிழலை சுப்பிரமணியம் பிரதர்ஸ், திருக்கடையூர் பிரதர்ஸ் நாதஸ்வரக் கச்சேரி நடைபெற்றது.

சதுர்க்கச்சேரி நிறுத்தப்பட்டது.

இரவில் பஞ்சமூர்த்திகள், பெருமாள் மகாலெட்சுமி எழுந்தருளல் செய்யப் பெற்றது.

ஜில்லா போர்டு, காரைக்குடி முனிசிபாலிடி, தேவகோட்டை முனிஸிபாலிடி. இவற்றிலிருந்து தண்ணீர் லாரிகள் சப்ளை செய்யப்பட்டிருந்தன. கோட்டையூர் பஞ்சாயத்து போர்டார்க்கூஸ்களுக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்திருந்தனர்.

## இராயவரம்.

விவேகானந்த வாசக சாலையின் முதலாவது ஆண்டு ஆறுவது மாதாந்தரக் கூட்டம், 17-5-37 மாலை 5½ மணிக்கு மகா நாட்டுப்பந்தலில் டாக்டர், V. ஷண்முகம் L. M. P. அவர்கள் தலைமையில் ஆரம்பமாகியது. சென்ற கூட்ட அறிக்கை காரியதரிசியால் படிக்கப்பட்டபின், சீர்திருத்தம், திருவிழாவும் கொண்டாட்டமும், பெண்கள் முன்னேற்றம், ஜீவகாருண்யம், என்ற விஷயங்கள் பற்றி முறையே கு. முத்தையா, S. அழகப்பா, மங்கையர்க்கரசி (சிறுபெண்) ராம. வயிரவன் ஆகியோர் பேசினார்கள். அப்பால் தலைவரவர்கள் தக்க சான்றுகளுடன் விரிவாக முடிவுரை கூறிய பின்னர் காரியதரிசியால் வந்தனம் கூறக் கூட்டம் ராத்திரி 8 மணிக்கு இனிது கலைந்தது.

## இந்தியாவில் அடிமை வியாபாரம்

### உதவி இந்தியா மந்திரியின் பேச்சு

லண்டன் ஜூன் 21—

மிஸ்டர் ஹார்வேக்குக் காமன்ஸ் சபையில் லார்டு ஸ்டான்லி பதில் கூறுகையில், அஸ்ஸாமில் நாகாமலை பிரதேச டெப்டி கமிஷனர் பாங்ஷா வகுப்பினர் பிரதேசத்திற்குச் சமீபத்தில் சென்றதில் நல்ல பலனேற்பட்டதாயும் விடுதலை செய்ய உத்தேசிக்கப்பட்ட அடிமைகள் எல்லாரும் விடுதலை செய்யப்பட்டு விட்டதாயும், அவர்களைப் பிடித்து வைத்திருந்த கிராம ஜனங்கள் தக்கபடி தண்டிக்கப்பட்டு இனி அடிமை பிடிக்கக் கூடாதென்று எச்சரிக்கை செய்யப்பட்டிருப்பதாயும் தெரிவித்தார்.

## டவுன் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம்

காரைக்குடி நகரக் காங்கிரஸ் கமிட்டியின் கூட்டமொன்று வருகிற திங்கட்கிழமை மாலை காங்கிரஸ் மாளிகையில் நடைபெறுமென்றுதெரிகிறது.

காரைக்குடி முனிஸிபல் தேர்தல் சம்பந்தமாக ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டியார் நியமித்துள்ள 'அட்-ஹாக்' கமிட்டியை ஒப்புக்கொள்வதா என்பது குறித்தும், டவுன் காங்கிரஸ் கமிட்டியின் சார்பில் புதிய 'அட்-ஹாக்' கமிட்டி நியமிக்கவேண்டியது அவசியமா என்பது குறித்தும் ஆலோசிக்கப் படுமென்று தெரிகிறது.

## காரைக்குடியில் விபசாரிகள்

"வேதாளம் பழையபடி முருங்கை மரத்தில் ஏறிக்கொண்டது" என்று சொல்வதுபோல் காரைக்குடி முருங்கை மரத்தில் பழையபடி விபசார வேதாளம் குடிபுக ஆரம்பித்துவிட்டது. விஜிலன்ஸ் கமிட்டியார் என்ன முயற்சி செய்தும் பயன்படாமல் போனது கண்டு வருந்த வேண்டியிருக்கிறது. இதற்கெல்லாம் காரணம் போலீசாரின் அசிரத்தைதான்என்று சொல்வது மிகையாகாது. கைதிசெய்யப்பட்ட விபசாரிகள்மீது வழக்குத் தொடுத்திருந்தும் இன்னும் சார்ஜ் ஷீட் தாக்கல் செய்யவில்லை யென்று தெரிகிறது. இதன் காரணம் என்னவென்று தெரியவில்லை. இந்த அசிரத்தைதான் விபசாரிகள் மீண்டும் காரைக்குடியில் குடியேறும்படியான நிலைமையை உண்டாக்கிவிட்டதென்று துணிந்து சொல்லலாம்.

முன்பிருந்து ஓடிப்போன விபசாரிகளில் பாதிக்கு மேற்பட்டவர்கள் மீண்டும் குடிவர ஆரம்பித்து விட்டார்கள். குன்னக்குடிக்குக் குடியேறினவர்கள் கூட காரைக்குடியை நோக்கிக் கொஞ்சங் கொஞ்சமாக வந்துகொண்டிருக்கிறார்களென்றால் நிலைமை எப்படி அபிவிருத்தி அடைகிறதென்பதைக் கேட்கவாவேண்டும்? ஆகவே உடனே போலீசாரும் விஜிலன்ஸ் கமிட்டியாரும் வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று ஒரு நகரவாசி எழுதுகிறார்.

## ஓரியண்டல் லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி

### திருச்சி ஆபீசில் வரவேற்பும்-பிரிவுபசாரமும்

ஓரியண்டல் லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி திருச்சி கிளை ஆபீசில் காரியதரிசியாக வேலை பார்த்துவந்த திரு. என். சாமிநாதன் அவர்கள் பெங்களூருக்கு மாற்றப்பட்டு அவருக்குப் பதிலாக திரு. எம். எஸ். சுந்ரேசன் அவர்கள் வந்திருக்கிறார். ஆகையால் திரு. எப். ஜி. நடேசய்யர் அவர்கள் தலைமையின் கீழ் சென்ற 9—6—37ம்உ மாலை 5 மணிக்கு முந்தியவருக்கு பிரிவுபசாரப் பத்திரமும், பிந்தியவருக்கு வரவேற்புப் பத்திரமும் காரியாலயத்தைச் சேர்ந்தவர்களால் வாசித்துக் கொடுக்கபபட்டன. திரு. சுவாமிநாதன் அவர்களுடைய வேலை முறையைப் பாராட்டி டி. ராமாராவ், சி. ஆர். ராஜன், டி. வி. சீதாராம சாஸ்திரி, என். கே. ராஜகோபாலன், கே. ஏ. சாரி ஆகியவர்களும் தலைவரும் பேசினார்கள். சிற்றுண்டி விருந்துபசாரமும் நடந்தது.

## போக்குவரவு போர்டுகள்

### சரியாக உபயோகிக்கப்படவில்லை

காரைக்குடி முனிசிபாலிடியாரால் கார்கள், வண்டிகள் இவற்றின் போக்குவரவை ஒழுங்கு செய்யும்பொருட்டு (One way) "ஒரு வழி" என்று எழுதப்பட்ட போர்டுகளை ஒவ்வொரு வீதியிலும் ஏராளமாகச் செலவு செய்து போட்டிருக்கிறார்கள். இருந்தும் இந்த முறையைப் பொதுஜனங்கள் ஒழுங்காக அனுஷ்டிப்பதாகத் தெரியவில்லை. பழைய நிலைமையேதான் இன்னும் இருந்துவருகிறது. போக்குவரவின் சௌகரியத்தைமுன்னிட்டுஏற்படுத்திய இந்த ஏற்பாட்டைப் பொது ஜனங்கள் அலட்சியஞ் செய்வது கூடாது. பலருக்கு இவ்விவரம் தெரியாமலிருக்கலாம். ஆகவே முனிஸிபாலிடியார் குறிப்பிட்ட சில நாட்களுக்கு ஆங்காங்கு பீட் கிறுத்திக் கவனித்து ஒழுங்கு செய்ய வேண்டியது அவசியமென்று ஒரு கிருபர் எழுதுகிறார்.

## பனிச் சரிவால் 16 பேர் மரணம்

### நங்கபர்வ மலைச்சிகரமேற முயற்சி

சிம்லா, ஜூன் 20—

கில்ஜித் அரசியல் ஏஜண்டிடமிருந்து வந்துள்ள ஒரு செய்தி கூறுவதாவது:— நங்கபர்வத் மலைச் சிகரமேறும் ஜெர்மன் கோஷ்டிமீது பனி சரிந்ததால் ஏறுகிறவர்களில் 7 பேரும் 9 கூர்க்கர்போர்ட்டர்களும் கொல்லப்பட்டனர். கோஷ்டியின் தலைவரான வையன் பத்திரமாக இருக்கிறார். தகுந்த உதவியைச் செய்ய அரசியல் ஏஜண்டு அவ்விடத்திற்குச் செல்லுகிறார். அக் கோஷ்டியோடு சென்ற பிரிட்டிஷ் உத்தியோகஸ்தராகிய கூர்க்க படையைச் சேர்ந்த லெப்டினென்ட் டி. எம். பி. ஸ்மார்ட் தப்பித்துக்கொண்டு விட்டார். இங்குள்ள மலை ஏறும் நிபுணர்கள் இச் செய்தியைக் கேட்டு திடுக்கிடுகின்றனர். ஆனால், மலைமீதேறுவதற்கு இது சரியான பருவமில்லை யென்றே அவர்கள் அபிப்பிராயப்படுகின்றனர் இதற்கு முன் இரண்டு தடவை செய்த முயற்சிகளிலும் இதே மாதிரியான விபத்தே ஏற்பட்டிருக்கிறது. 1895-ம் வருஷத்தில் ஆங்கிலேயரான மம்மரி என்பவரும் இருபோர்ட்டர்களும் கொல்லப்பட்டனர். 1934-ம் வருஷ மேமாதத்தில் தலைவர் மெர்கல் உள்பட 4 ஜெர்மானியர்கள் இதே கதியடைந்தனர்.

## கொத்தபட்டணம் எதிரிகளுக்குத் தண்டனை

தென்னூலி, ஜூன் 17—

கொத்தபட்டணம் கோடைகால அரசியல் பள்ளிக்கூட வழக்கில் எதிரிகளான 16 பேர்களையும் தென்னூலி சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட்டு தண்டித்துவிட்டார். முதல் எதிரியான கே. சத்தியநாராயணாவுக்கு 6 மாதம் கடுங்காவலும் ரூ. 150 அபராதமும் விதிக்கப்பட்டது. இரண்டாவது எதிரியான ஏ. சத்தியநாராயண ராஜாவுக்கு 6 மீ கடுங்காவல் தண்டனையும் ரூ. 200 அபராதமும் அளிக்கப்பட்டது. இதர 14 எதிரிகள் ஒவ்வொருவரும்6 மாதக் கடுங்காவலும் ரூ. 100 அபராதமும் பெற்றார்கள். எல்லா எதிரிகளும் ஸி. வகுப்புக் கைதிகளாகவே நடத்தப்பட வேண்டியதென சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட் உத்திரவிட்டிருக்கிறார்.

## காரைக்குடி மணியம்மாள்

### கற்பழித்த கான்ஸ்டபிளுக்கு தண்டனை

தஞ்சை, ஜூன், 17—

தஞ்சை ஜில்லா ரிசர்வ் போலீஸ் கான்ஸ்டபில் சாமியா என்பவரும் பின்னும் 3 பேர்களும் சுமார் 16 வயதுள்ள காரைக்குடி மணியம்மாளைக் கற்பழித்ததாகச் சொல்லப்பட்டுள்ள கேசில் போலீஸ் இலாகா அதிகாரிகள் இலாகா விசாரணையை நடத்தி 4 ரிசர்வ் கான்ஸ்டேபில்களையும் சர்விஸிலிருந்து நீக்கிவிட்டனர். இனி இவர்கள்மீது கிரிமினல் வழக்கு நடத்தப்படமாட்டாது எனத் தெரிகிறது. வேலையிலிருந்து விலக்கப்பட்ட கான்ஸ்டபில்கள் மேல் அதிகாரிக்கு அப்பீல் செய்துகொள்ளப் போகிறார்களாம்.

## தங்க ஏற்றுமதி

பம்பாய், ஜூன் 19—

இன்றோடு முடிவடைந்த வாரத்தில் ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்கும் 4099248 ரூபா பெறுமான தங்கம் ஏற்றுமதியாயிற்று. இங்கிலாந்து தங்க மதிப்பு முறையை கைவிட்டபிறகு பம்பாயிலிருந்து இன்று வரை மொத்தம் 2985784306 ரூபாய் பெறுமான தங்கம் ஏற்றுமதியாகி இருக்கிறது.

## தந்திச் செய்தி

### சிங்கப்பூர் மார்க்கெட்

(ஸ. கி. தந்தி)

ஜூன் 21உ

ரப்பர் பீக்கல் நாற்பத்துமூன்று வெள்ளி.

### இரங்கூன் மார்க்கெட்

(நமது நிருபர் தந்தி)

ரெங்கூன், ஜூன் 23உ

| | |
|---|---|
| படகு நெல் | 90, 92 |
| ரயில் நெல் | 88, 90 |
| மீடோன் | 93 94 |
| ஸ்பெஷல் அரிசி | 219 217 |
| சின்னமில் | 227 225 |
| மீடோன் பஜார் | 230-230 |

### லண்டன் ரப்பர் ஸ்டாக்

ஜூன் 21

லண்டன் ரப்பர் ஸ்டாக்கு மொத்தம் 21,670 டன்கள். ஜூன் 14உ ஸ்டாக்கு 21924. ஜூன் 19உ யோடு முடிந்த ஒரு வாரத்தில் ரப்பர் டெலிவரி 1183 டன்கள். அதற்கு முந்தின வார டெலிவரி 919 டன்.

லிவர்பூல் ரப்பர் ஸ்டாக்கு 21983 டன். அதற்கு முந்தின வார இருப்பு 22640. இந்தவார டெலிவரி 1322 டன். அதற்கு முந்தின வார டெலிவரி 1972 டன்.

### சென்னை மார்க்கெட்

சென்னை ஜூன் 22உ

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத்தங்கம் | 34 | 10 | 0 |
| டிை வாயிதா | 34 | 11 | 9 |
| மூளா தோலா 1-க்கு | 34 | 4 | 0 |
| சவரன் மொத்தம் | 22 | 2 | 3 |
| டிை சில்லறை | 22 | 2 | 6 |
| வெள்ளி 100 ரூ. எடை | 52 | 4 | 0 |
| டிை ரூ. 1 எடை | 0 | 9 | 0 |

### கொழும்பு மார்க்கெட்

(நமது நிருபர்)

கொழும்பு ஜூன், 21உ

இன்று பகல் 2-15 மணிக்கு மார்க்கெட்டில் ஷீட் ரப்பர் விலை 48 செண்ட் ஆகவும் கிரேப் ரப்பர் 57½ ஆகவும் இருந்தது.

### லண்டன் மார்க்கெட் ரப்பர் விலை

ஜூன் 21உ

ராத்தல் ஒன்றுக்கு 9⅝ பென்ஸ்

## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திற்கும் பினாங்குக்கும் (ஏஜண்டினிடமிருந்து)

புறப்படுதல்

கப்பல்கள் நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரோனா | 3—7—37 |
| ரஜூலா | 17—7—37 |

வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| ரோனா | 24—6—37 |
| ரஜூலா | 8—7—37 |
| ரோனா | 22—7—37 |

## இலட்சுமிபுரம் மீனாட்சிசங்கம்.

இலட்சுமிபுரம், ஸ்ரீமீனாட்சிசங்கத்தின் பன்னிரண்டாவது ஆண்டு, இரண்டாவது மாதக் கூட்டம் நாளது ஈசுவர வருடம் வைகாசித்திங்கள் 30-ம் நாள் பிற்பகல் 4 மணிக்கு, சொ. கி. ஆசிரியர் திரு. S. அருணாசலம் பிள்ளை அவர்கள் தலைமையில் ஆரம்பமாயிற்று. அது சமயம் வித்தியாசாலை மாணவ மாணவிகள் பலர், பாட்டு, பேச்சு நடிப்பு, உரையாடல் முதலியன நிகழ்த்தினர். இறுதியில் தலைவரவர்கள் தகுந்த முடிவுரை கூறியதும் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## ரயில் வண்டிப் போக்கு வரவு

### காரைக்குடியிலிருந்து திருச்சிக்கு

| வண்டிகள் விபரம். | வரும் நேரம் | புறப்படும் நேரம் |
|---|---|---|
| கிர். 32. பாசஞ்சர். | .... | 7-5 |
| கிர். 68. " | 10- 2 | 10-12 |
| கிர். 30. " | 13-57 | 14-7 |
| இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் | 16-15 | 16-25 |
| கிர். 26. பாசஞ்சர் | 20- 0 | 20-12 |
| கிர். 8. தனுஷ்கோடி பாஸ்ட் பாசஞ்சர் | 1-17 | 1-70 |

### காரைக்குடியிலிருந்து மானமதுரைக்கு

| வண்டிகளின்விபாம். | வரும் நேரம் | புறப்படும் நேரம் |
|---|---|---|
| கிர். 25. பாசஞ்சர் | 6-30 | 6-36 |
| இண்டோ-சிலோன் எக்ஸ்பிரஸ் | 10- 5 | 10-13 |
| கிர். 67. பாசஞ்சர் | 12-50 | .... |
| கிர். 33. " | .... | 14-2 |
| கிர். 29. " | 15-47 | 16-17 |
| கிர். 31. பாசஞ்சர் | 19-53 | 20-9 |
| கிர். 7. தனுஷ்கோடி பாஸ்ட் பாசஞ்சர் | 0- 9 | 0-15 |

33 கிர் பாசஞ்சரும், 29 கிர் பாசஞ்சரும் நோாக மதுரை ஜங்ஷனுக்குப் போகின்றன.

### "தேவகோட்டை ரோடு"

காரைக்குடிக்கடுத்து தேவகோட்டை ரோட்டிலுள்ள ஷை ஸ்டேஷனில் இருந்து.

### மானமதுரைக்கு

| வண்டிகள் விபரம். | புறப்படும் நேரம். |
|---|---|
| கிர். 25 பாசஞ்சர் | 6-46 |
| இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் | 10-13 |
| கிர். 67 பாசஞ்சர் | .... |
| கிர். 33 " | 14-10 |
| கிர். 29 " | 16-26 |
| கிர். 29 " | |
| கிர். 7 தனுஷ்கோடி பாசஞ்சர் | |

### திருச்சிக்கு

| வண்டிகள விபரம். | புறப்படும் நேரம். |
|---|---|
| கிர். 68 பாசஞ்சர் | 9-55 |
| கிர். 30 " | 13-50 |
| கிர். 2 " | 16--7 |
| கிர். 34 " | 18-19 |
| கிர். 26 " | |
| கிர். 8 " | |

## விதவை தற்கொலை

மேலச் சேரியைச் சேர்ந்த தாயம்மாள் என்ற 30 வயதுள்ள விதவை தூக்குப் போட்டுக்கொண்டு மாண்டாள். போலீஸார் மரண விசாரணை நடத்தினர். நெடுநாள்பட்ட வயிற்று வலி யென்று சிலர் கூறுகின்றனர். வேறு சிலர் கள்ளக் காதலால் சமூகத்தாரால் ஏற்பட்ட துன்பந் தாங்காது இறந்தாள் என்று கூறுகின்றனர்.

# முனிஸிபல் ஓட்டர்கள் மகாநாடு

## அட்ஹாக் கமிட்டியாருக்கு சில யோசனைகள்

(வி. பரமசிவன்)

காரைக்குடி முனிஸிபல் தேர்தல் இன்னும் ஒரு சில மாதங்களில் நடக்க விருப்பதையும், காங்கிரஸ்காரர்கள் அதில் போட்டியிடவேண்டியது அவசியம் என்று காங்கிரஸ் கமிட்டி தீர்மானித்திருப்பதையும் நேயர்கள் அறிவார்கள். இதை ஒட்டி தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் திரு. முத்துரங்க முதலியாரவர்களின் ஒத்துழைப்போடு தேர்தல் பிரசாரமும் ஆரம்பிக்கப்பட்டுவிட்டது.

* * *

இந்த நிலைமையில் ஓட்டர்களுடையவும், காங்கிரஸ் நிர்வாகிகளுடையவும் கடமை என்ன என்பது முக்கியமான பிரச்னை. காரைக்குடி முனிஸிபல்தேர்தல் மற்ற இடங்களிலுள்ள முனிஸிபாலிடிகளின் தேர்தல்களைப்போல் அவ்வளவு எளிதானதென்று நினைப்பதற்கில்லை. ஆனல் யார்கண்டார்கள்? ஒருவேளை எளிதானதாகவும் இருக்கலா மல்லவா? காங்கிரஸ்காரர் முதல் முதலாக இப்பொழுதுதானே இந்த முனிஸிபாலிடி மீது கண்வைத்திருக்கிறார்கள்

* * *

முனிஸிபாலிடியைக் கைப்பற்றுவது எளிதானது என்பதும் கடினமானது என்பதும் எலெக்ஷன் முடிந்தபிறகோ முடிவதற்குச் சில நாட்கள் முன்போ தான் தெரியக் கூடும். இந்த சந்தேகாஸ்பதமான நிலைமையில் காங்கிரஸ்காரர்களாகிய நாம் மிதமாக இருந்து விடமுடியுமா? இருப்பது தான் நியாயமா? எனவே நாம் செய்ய வேண்டியது என்ன?

* * *

தேர்தலில் போட்டியிருக்கும் என்ற நிலைமை ஏற்பட்டால் அது சாதாரணப் போட்டியாக இராது. கடுமையிலும் கடுமையாகத்தான் இருக்கும். ஏன்? பணக்காரர்கள் போட்டி போடும்போது அதுஎளிதாகஎப்படித்தான்இருக்கமுடியும்? அதிலும் ஜில்லா போர்டைப் போல மூவாயிரம் நாலாயிரம் ஓட்டுகளுமில்லை, சட்டசபையைப் போல 30 ஆயிரம் 40 ஆயிரம் ஓட்டுகளுமில்லை. வார்டு 1க்கு உயர்ந்தால் 400 ஓட்டுகளுக்குமேல் இல்லை. பணத்தின் பலத்திலேநம்பிக்கை வைத்திருப்பவர்களுக்கு இந்த 400 ஓட்டுகளில் ஒன்று கூட விடாமல் விலைக்கு வாங்கிவிடலாமென்ற நம்பிக்கை ஏற்படுவதுஇயல்பல்லவா?

* * *

காங்கிரஸ் காரர்களாகிய நாம் பண பலத்தில் நம்பிக்கையற்றவர்கள். அதில் நாம் முற்ற முடிந்த நாஸ்திகர்கள்தாம்! ஆனல் பொதுஜன உணர்ச்சியில் முழு நம்பிக்கையுடையவர்கள் அதில் எந்த ஆஸ்திகனும் நம்மோடு போட்டிபோட முடியாது. பிரசாரம் என்ற ஒரு ஆயுதத்தைத்தான் இதுவரை நாம் எந்தத் தேர்தல்களிலும் உபயோகித்து வந்திருக்கிறோம். நமது காண்டீபம் பிரசாரம் தான்! பிரசாரம் உண்மையாக நடத்தப்படுமானல் நிச்சயமாகச் சொல்லுகிறேன், எந்த எதிர்ப்பும் நம் முன்னல் காலூன்றி நிற்கமுடியாது. இது நிச்சயம்! முக்காலும் நிச்சயம்!

* * *

ஒரு வேளை பலமான எதிர்ப்புக்கு உரியதாக இருக்குமென்று கருதப்படுகிற காரைக்குடி முனிஸிபல் தேர்தலில் பிரசாரம் நூறு பர்செண்டும் நிச்சயமாக ஒழுங்காக—முறையாகச் செய்யப்படுமானல் வெற்றியும் நூறு பர்செண்ட் நிச்சயம். பிரசாரம்செய்வதிலும் இன்னெரு முக்கியமான விஷயத்தை கவனிக்க வேண்டுமென்பது எனது அபிப்பிராயம். பிரசாரத்தினுடைய போக்கு அந்தந்த இடங்களின் மக்களுடைய மனப்பான்மைக் கேற்றதாக இருக்கவேண்டியது அவசியம். எனவே பிரசாரம் இந்த ரீதியில்தான் நிச்சயமாக இருக்கவேண்டும் என்பதை முன்னதாகவே "அட்—ஹாக்" கமிட்டியார் முடிவு செய்து பிரசாரகர்களுக்கு அறிவித்து விடுதல் அவசியம்.

* * *

மற்றும் ஒரு முக்கியமான யோசனையைத் தேர்தல் கமிட்டியாருக்குச் சமர்ப்பித்துக் கொள்கிறேன். நான் சொல்லும் இந்த விஷயம் இது வரை எங்கும் கையாளப்பட்டிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அதனலேயே இது ஏற்றுக்கொள்ளக்கூடியதல்ல வென்று தள்ளிவிடக்கூடாது. பரிட்சார்த்தமாகப் பார்க்கலாம். பயன்பட்டால் நாடெங்கும் அனுஷ்டிக்கட்டும். முனிஸிபல் ஓட்டர்கள் மகாநாடு ஒன்று கூட்ட வேண்டு மென்பதே அந்த யோசனை. இதனல்ஒரு பெருங்கிளர்ச்சி,ஒருஉத்வேகம்,முதலியவை இருக்குமென்று நம்புகிறேன். முக்கியமான சில தலைவர்களை அழைத்துவந்து எவ்விதக் கட்டணமுமின்றி மகாநாட்டை ஒரே நாளில் நடத்தி சம்பிரதாயப்படி சில தீர்மானங்களையும் நிறைவேற்றி முடிப்பதால் நல்ல பலனுண்டு என்று நான் நம்புகிறேன்.

* * *

ஆகவே தேர்தல் கமிட்டியார் இத்தகைய பிரதானமான வேலைகளில் தங்கள் கவனத்தைச் செலுத்திகாரைக்குடியின் எதிர்கால அரசியல் நிலை கம்பீரமானதாகவும் ஒளியுள்ளதாகவும் இருக்குமாறு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

### கண்டனூர்

#### கிராம காங்கிரஸ் கமிட்டி

கண்டனூர், 21—6—37.

ஜூன் 21-உ காலை 9 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கக் கட்டிடத்தில் கே. விஸ்வேஸ்வான் அவர்கள் தலைமையில் அங்கத்தினர்களின் கூட்டம் ஒன்று நடைபெற்றது. ஷை கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏக மனதாக நிறைவேற்றப்பட்டன.

1. சுபாஷ் சந்திரபோஸ் சாவர்க்கார் இவர்கள் விடுதலை அடைந்ததற்கு இக் கூட்டம் மகிழ்கிறது.

2. கொத்தப்பட்டணத்தில் ஏற்பட்டிருந்த அரசியல் பள்ளிக்கூடத்தை சட்டவிரோதமானதென்று நடக்க ஒண்ணது தடுத்து தடியடிப் பிரயோகம் செய்யும்படி உத்திரவிட்ட பினுமி மந்திரிகளை இக் கூட்டம் கண்டிக்கிறது.

3. சாரண இயக்கத் தலைவர் லார்டு பேடன்பவுல் என்பவர் இந்தியர்களுக்கு ஒழுக்கமில்லை என்று கூறியதை கண்டிப்பதோடு இந்திய மாணவர்கள் சாரண இயக்கத்தில் சேரக்கூடாதென்று கேட்டுக்கொள்ளுகிறது. 11 மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது.

### கலியாணத்தில் கோரமரணம்

#### 10 பேர் உயிரிழந்தனர்

கொழும்பில் கலியாணக் கொண்டாட்டமொன்று துக்கக் கொண்டாட்டமாக முடிந்தது. சந்தோஷத்திற்காக வெடிக்கவைத்திருந்த வாணங்கள் சந்தோஷத்தையே வெடித்துத் தகர்த்துவிட்டன.

தியால்கோடாவில் மணமகன் வீட்டிற்கருகில் வாணவேடிக்கை நடத்துகையில் 8 அங்குல குழாய் அவுட் வாணத்தில் வெடிப்பதற்குப் பதில் தரையிலேயே வெடித்துவிட்டது. 10 பேர்கள் கொல்லப்பட்டு 25 பேர்கள் காயமடைந்தனர்.

## பில்பா பிடிபட்டது

### ஸ்பெய்ன் கலக நிலைமை

ஜூன் 19—

கலகக்காரர், பில்பாவுக்குள் பிரவேசித்து, தலைவர் மாளிகை, உள்நாட்டு மந்திரி காரியாலயம், டவுண் ஹால் முதலியவற்றை இரத்தம் சிந்தாமலேயே கைப்பற்றிக் கொண்டனர்.

நகரின் நடுமையத்தை பாஸ்க் துருப்புகள் சூழ்ந்துகொண்டிருக்கின்றன. ஆனல், அவை நீண்டநேரம் எதிர்த்து நிற்க முடியாது.

பில்பா பிடிபட்டதற்காக ஜெனரல் பிராங்கோவை வாழ்த்தி, ஹிட்லர் முசோலினி ஒரு தந்தி அனுப்பியிருக்கிறார்கள்.

பிரிட்டனில், ஸதாம்ப்டன் முகாமில் இருந்துவரும் பாஸ்க் குழந்தைகளுக்கு பில்பா வீழ்ச்சியைப்பற்றிய செய்தி, சனி இரவு அறிவிக்கப்பட்டது உடனே 500 குழந்தைகள் வருத்தமும் கோபமும் நிறைந்தனவாய், கைக்குக் கிடைத்த கத்திகளை எடுத்துக்கொண்டுபோய் அருகிலிருந்த காட்டை துவம்ஸம் செய்தன. 150 குழந்தைகள் இன்னம் அகப்படவில்லை.

### முனிஸிபல் ஸ்கூலில் 5-ம் வகுப்பு

காரைக்குடி முனிஸிபல் எலிமெண்டரி பாடசாலைகளில் 5-ம் வகுப்பு இம் மாதத்திலிருந்து அமைக்கப்பெற்றிருக்கிறது. ஆகையால் பிள்ளைகள் 1-முதல் 5-வகுப்பு முடிய கல்வி பயிலலாம்.

## நோட்டீஸ்

மானமதுரை

### டி. மு. கோர்ட்டு

O. S. No 84 of. 36.

திருமால்த் தேவர் } வாதி.

திரு. ராமய்யாத் தேவர்
திரு. நாகலிங்கத்தேவர்
செட்டிதெரு, கொழும்பு } 6—7 பிரதி வாதிகள்.

பிரதிவாதிகளின் பேரில் பிருதின் தபசில் நிலத்தை வாதி அனுபவிப்பதினின்றும் தடை செய்யாமலிருக்க இஞ்ஜங்ஷன் கோரியும் ஸ்வாதீனம் பெறவும் செய்யப்பட்டிருக்கும் ஷை வியாஜியத்தில் 6—7 பிரதிவாதிகள் ஆஜராவதற்க்காக 9-7-37உ வாய்தா யேற்ப்பட்டிருக்கிறது.

S. சேஷாத்ரி அய்யங்கார்,
வக்கீல்

மானமதுரை
17—6—37.





## கதர் ஏழைகளின் உயிர்

(MR. பெரியணன்)

பாரதத்தாயின் புதல்வர்கள் பல்லாயிரக் கணக்கானோர், வறுமையால், பசிப்பிணியால், நோயால் வாடுகின்றனர்; கதறுகின்றனர். பெரும்பாலும் மேற்கூறப்பட்ட தன்மையிலிருக்கும் மக்களாலேயே கதர் உற்பத்தி செய்யப்படுகிறது. நாம் கதராடையை—ஏழைகளுக் குணவளிக்கச் சாதனமாயுள்ள ஆடையை அணியாமலிருந்தால், அறியாமையிருளில் வெகுதூரம் பிரவேசித்து விட்டவர்களாகிறோ மன்றோ!

வருடந்தோரும் பல கோடி ரூபாய்கள் அன்னிய நாட்டுக்கு அந்நாட்டு ஆடையை வாங்குவதன் நிமித்தம், கப்பல் கப்பலாய் அனுப்புகிறோம். நம் நாட்டு ஆடையை அணிந்தால் ஒட்டி உலர்ந்து போன ஏழைகளின் வயிற்றிற்கு அரைவயிற்றுக் கஞ்சியாவது வூற்றின பெரும்புண்ணியத்திற்குஆளாவோ மன்றோ! மேலும் நம் நாட்டுச் செல்வம் நம் நாட்டிலேயே நிலவுகிறது!

நம் நாட்டுமக்களால் நமக்காகவே சிருஷ்டிக்கப்படும் புனிதமான கதரை நாமே புறக்கணித்தல் நியாயமாகுமா? கதரை அணிந்தாலே ஒரு தனிச்சிறப்பு; புனிதத்தன்மை! கதர்—ஏழைகளின் உயிர்; அதை அலட்சியம் செய்யலாமா? கதர் உற்பத்தி, கைத்தொழில் கோட்டையின் முதலாவதுபடி; முதல்படியிலேயே வழுக்கி விழுந்தால்........?

பொன்னும், மணியும் பொழிந்த தேசம், பாலும், தேனும் பல்கியநாடு! பஞ்சம் கொண்டது, வறுமையுற்றது, நோய்க்கிரையாகியது! அதிகாரவர்க்கத்தின் ஆட்சியினல் அன்னியர் வியாபாரம் தழைத்தோங்கியது; நம் தேசத் தொழில்கள் வேரறுக்கப்பட்டன. இவ் வீழ்ச்சி அன்னியராட்சியினலேற்பட்டது. ஆகையால் அன்னியநாட்டுத் துணி வாங்குவதனலே தேசத்திற்கு ஏற்படும் தின்மைகளை நன்குணர்ந்து கொண்டநாம், இனியும் பரதேசத்துணியைத் தீண்டுவோமானல்—ஒருவன் தன் தர்மபத்தினியை விட்டு, மோசக்குழியில் வீழ்த்தும் விலைமாதரை நாடுவது போலிருக்கிறதல்லவா?

பாரதப் புதல்வர்களே! அன்னியத் துணி இறக்குமதியை வேரும் வேரடி மண்ணுமில்லாமலே நசுக்கி பாரதியின் ஆடையை, பாரசக்தியின் அருள்பிரசாதமாகிய கதரை அணியுங்கள்! ஏழைவயிற்றிற்கு கஞ்சிவார்க்கும் பெரும் புண்ணியத்திற்காக வாகிலும் கதரைக் கட்டுங்கள். அதுவே நமக்கு கந்தஆடை, நம் நாட்டுச் சின்னம்! ஸ்ரீ "ராஜாஜி"யின் பொன்மொழிப்படி, பயத்தையும், ஆடம்பரத்தையும், அடிமைச்சின்னத்தையும் விரும்புவர்கள், அன்னிய நாட்டு மோஹவலையில் சிக்கிச் சொக்கிமாளட்டும். மன ஓர்மையும், தேச ஆர்வமும், கனிந்த உள்ளமுமுடையவர்கள் கதரைக் கட்டுங்கள், கடைத்தேறலாம்!

காந்தீயமான கதரை—தரித்தால் வாடும் மக்களின் உயிரைக்காக்கும் கதரைக்கட்டுங்கள். பரதேசித்துணியை மனச்சாட்சிக்கு விரோதமான துணியை அணியாதீர்கள்! நாம் கதர் கட்டும் விஷயத்தில்கூட மற்ற மாகாணத்தவர்களைக் காட்டிலும் பிற்போக்கான நிலைமையிலிருந்தோமானல்.........நமக்குத்தான் உணர்ச்சியில்லையா? நாம் உண்டுகளித் துறங்கி ஆனந்தசாகரத்தில் மூழ்கியிருக்கிறோம். மற்றொரு பகுதியினர்—நம்முடைய சகோதரர்கள் தான்! ஒண்டக்குடிசையின்றி, வெயிலால், பனியால் மழையால் நனைந்து, கஞ்சியின்றிக் காற்றை உட்கொண்டு பூமாதேவியின் அணைப்பிலிருக்கிறார்கள்! அந்தமக்கள் உய்யும் பொருட்டாவது கதர்க்கட்டுங்கள்! தானதருமங்கள் செய்கிறீர்கள்—ஏழைகளுக் குணவளிக்கும் கதரைக் கட்டாமல் இன்னும் அறியாமை அந்தகாரத்தில் மூழ்காமல், "அறிவுச்சுடர்" எனும் தீபவொளியினல் அறியாமையைச் சுட்டெரித்து காந்தீயமான கதரைக் கட்டுங்கள்!

கதராபிமானிகளே! நாடுகள் தோறும் கூட்டத்தைக் கூட்டுங்கள்; கூட்டங்கள் தோறும் கதர்ப்பிரசார வெள்ளத்தை பொதுமக்களின் உள்ளத்திலே ஓடச்செய்யுங்கள்! எவ்வளவு ஊதினலும் ஒரே சங்கைத் தான் ஊதவேண்டுமாதலால் கடைசியாக கதரைக் கட்டுங்களென்று உங்களைக் கும்பிட்டு கேட்டுக் கொள்கிறேன்.

# வைசிராய் பேசுகிறார்

## ராஜீநாமாவைக் கேட்பது சரியல்ல

### சீர்திருத்தம் நிறுத்திவைக்கப்பட்டால்—

### பின்னல் நடப்பதை யாரும் தடுக்க இயலாது

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கவர்னரின் விசேஷப் பொறுப்புகளுக் குட்பட்டதாயிருப்பினும் மந்திரிகள் சட்ட சபைகளுக்கு ஜவாப்தாரிகளாவார். கவர்னர் தமக்கு உசிதமாகத் தோன்றுவதுபோல் நடக்கக் கட்டுப்படாத எல்லா விஷயங்களிலும் அவர் தமது மந்திரிகளின் ஆலோசனையை ஒப்புக்கொண்டே யாகவேண்டும்.

ஒவ்வொரு கவர்னரும் தமது மந்திரி சபையின் ஆதரவைப் பெறக் காலே கொள்வது திண்ணம். அவர் சரியான காரணமில்லாமல் மந்திரிகளின் ஆலோசனைக்கு விரோதமாகவோ, அவர்களுடைய ஆதரவில்லாமலோ தமது விசேஷ அதிகாரத்தை நிறைவேற்றும் முறையில் நடந்துகொள்ள மாட்டாரென்பதும் நிச்சயம். அப்படி அபிப்பிராய பேதம் ஏற்படும் விஷயங்களில் தாம் என்னென்ன காரணங்களை முன்னிட்டு மந்திரிகளின் கருத்தை ஏற்றுக்கொள்ள முடியவில்லையென மந்திரிகளிடம் விளக்கி அவர்களுடைய அபிப்பிராயங்களை மாற்றத் தம்மாலானவரை முயன்று அப்பொழுதும் மந்திரிகளின் மனப்பான்மையை மாற்ற முடியவில்லையென்றால் மந்திரிகளின் ஆதரவைத் தாம் பெறமுடியவில்லை யென்று ஆழ்ந்த வருத்தத்துடன் தமது உத்தரவைப் பிறப்பிப்பார்.

#### முக்கியப் பிரச்னைகள்

கவர்னரின் விசேஷப் பொறுப்புகளுக் குட்பட்ட விஷயங்களும் முடிவுகளும் முக்கியாம்சத்தில் வித்தியாசமுள்ளதை ஒரு விஷயம் சாதாரணமானதா யிருந்தாலும் முக்கியமானதாயிருந்தாலும் இதே வேலை முறையைக் கையாள்வதா?

தங்கள் ஆலோசனைக்கு விரோதமாக கவர்னர் செய்யும் முடிவு யாதாயினும் அது முக்கியமானதோ, முக்கியமற்றதோ எங்ஙனமாயினும், அதன் விளைவாகத் தங்கள் நிலைமை ஒரே அளவு பாதிக்கப்பட்டிருப்பதாக மந்திரி சபையினர் கருதலாமா? கவர்னர் தமது விசேஷப் பொறுப்புகளுக்குட்பட்ட ஒரு விஷயத்தில் நான் ஏற்கனவே குறிப்பிட்டதுபோல் மந்திரிகள் தமது கருத்தை ஏற்குமாறு செய்ய தம்மாலானவரை முயன்றும் மந்திரி சபை ஏற்காத ஒரு உத்தரவைப் பிறப்பிக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகையில் மந்திரிகள் ராஜிநாமா செய்வதா அல்லது பகிரங்கமாகவோ தனித்தனியாகவோ அல்லது இரண்டு முறையிலுமோ இவ்விஷயமாக தங்கள் கருத்தை வெளியிட்டு விட்டு தங்கள் வேலையை மேற்கொண்டு நடத்திவருவதா? இவை யனைத்தும் கிரியாம்சத்தில் முக்கியமாக விளங்குபவையாகும். இவைபற்றி சமீபத்தில் எல்லா ராஜ்யக் கட்சிகளும் சிரத்தை செலுத்தியிருக்கின்றனர். ஏனெனில் இதுபோன்ற ஒரு பிரச்னையில் வெளியாகும் அறிக்கை ஒவ்வொரு மாகாணத்திலுமுள்ள ஒவ்வொரு கட்சிக்கும் முக்கியம் வாய்ந்ததாகும்.

ஆறு மாகாணங்களில் மெஜாரிட்டியாக உள்ள கட்சியிலிருக்கும் பிரபலஸ்தர்களோ அல்லது அத்துடன் சம்பந்தம் கொண்ட பிரமுகர்களோ விடுத்த அறிக்கைகளிலிருந்து புதிய அரசியல் நடத்திவைக்கப்படும். முறைபற்றியும் மந்திரிகள் தாங்கள் நியாயமாக நடத்தப்படுவதுபற்றியும் மந்திரிகள் அதிகாரத்திற்குட்பட்ட விஷயங்களில் கவர்னர் தலையிடாதிருப்பதுபற்றியும் கூடியவரை ஐயங்கள் நீங்குவது பெரும்பாலும் இக்கேள்விகளுக்கு அளிக்கப்படும் பதிலையே பொறுத்திருப்பதாகத் தெரிகிறது.

அரசியலை நடத்திவைக்கவும் அதன்மூலம் ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மந்திரிகளிடம் மாற்றப்பட்டுள்ள அதிகாரங்களையும் பொறுப்புகளையும் பயன் படுத்திக் கொள்ளவும் சந்தர்ப்பம் கிடைத்துள்ள ஒவ்வொரு கட்சிக்கும் இந்த பதில் முக்கியமானதாகும். எனவே இதுபற்றி எனது கருத்தைச் சிறிதும் சந்தேகத்திற் கிடமில்லாத முறையில் தெளிவாக்குவது நலம். இதுவே இந்தியா மந்திரியினுடையவும் எல்லா கவர்னர்களுடையவும் கருத்தாகும். முதலில் இது பற்றி ஒவ்வொரு அம்சத்தினுடையவும் முக்கியா முக்கியத்தை சரிவர உணர்ந்து கொள்ளவேண்டியது அவசியமெனத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இக்காரணத்தை முன்னிட்டு சமீபத்தில் காந்திஜி வெளியிட்ட யோசனையை நான் வரவேற்கிறேன்

கவர்னருக்கும் மந்திரிகளுக்கும் ஒரு விஷயத்தைப்பற்றி கடுமையான அபிப்பிராய பேதம் ஏற்படுகையில் தான் அவ்விருதாப்பினரும் பிரிவதுபற்றிய பேச்சுக்கிடமுண்டு என அவர் தெரிவித்தார். 'கடுமையான அபிப்பிராய பேதம்' என்பதை பல்வேறு விதமாகப் பொருள் படுத்தலாம் ஆனல் அத்தகைய அபிப்பிராய பேதத்திற்குக் காரணமாயுள்ள விஷயம் உண்மையில் மிக முக்கியமானதா யிருக்கவேண்டுமென்பதே அதன் பொதுவான அர்த்தமென்பதை ராஜீய, நிர்வாக அனுபவமுள்ளவர்கள் ஒப்புக்கொள்வர். மந்திரிகளுடைய அதிகாரத் குட்படாத விஷயங்களில் அவர்களுடைய அபிப்பிராயத்திற்கு விரோதமாக வேறு வழியின்றி கவர்னர் தலையிடவேண்டியிருந்தால் அது அவருடைய பொறுப்பை நிறைவேற்றி வைப்பதற்கு மிகவும் அவசியமானதாயிருக்கும்.

அவ்விதப்பிரச்னை ஏற்படுகிறதென்று வைத்துக்கொள்ளுவோம். கவர்னரும் மந்திரிகளும் ஏற்கனவேயுள்ள அபிப்பிராய மின்றியும் தங்களுடைய பொறுப்பை உணர்ந்தும் அப்பிரச்னையை அணுகுகிறார்கள். கவர்னர் தமக்குப் பார்லிமெண்டிடத்திலுள்ள பொறுப்பை உத்தேசித்தும் மந்திரிகள் சட்ட சபைக்குத்தங்களுக்கிருந்துவரும்ஜவாப்தாரித்தவத்தை உத்தேசித்தும்சமரசமுடிவுக்குவரக்கூடவில்லையாயின் மந்திரிகள்ராஜிநாமாச் செய்தவிட வேண்டும். அல்லது கவர்னர் அவர்களை விலக்கிவிட வேண்டும். ராஜீநாமாவா? விலக்கா என்பதற்குள் அரசியல் அனுஷ்டானமானது ராஜிநாமாவுக்கு அனுகூலமானதாகவே இருக்கிறது. ராஜிநாமாச் செய்துவிடுவது தன் மதிப்பைக் காத்துக்கொள்ளுவதற்குச் சிறந்த மார்க்கமாகும். கவர்னருடைய செய்கையில் மந்திரிகளுக்கு இருந்துவரும் உணர்ச்சியைக் காட்டிக்கொள்ளவும் அது சரியான வழியாகும். ராஜிநாமாவானது மந்திரிகள் அந்தச் சமயத்தில் அவர்களாகவே செய்வது. மந்திரிகளை டிஸ்மிஸ் செய்வது அவர்கள் தாழ்ந்தவர்கள் என்ற அர்த்தம் தொனிப்பதற்கு இடமுண்டு. புதிய அரசியலில் அவ்விதத் தாழ்மை உணர்ச்சிக்கு இடமில்லாமல் செய்ய வேண்டும் என்பதே நோக்கம். இருந்தாலும் கவர்னர்கள் சில நிலைமைகளில் மந்திரிகள் ராஜிநாமாவைக் கோரவேண்டுமென்று சொல்லப்படுகிறது. ஆனல் அரசியல் சட்டத்தில், அந்த வழி சொல்லப்படவில்லை. ஆகவே கவர்னர்கள் அதை ஒப்புக்கொள்ளமுடியாது. ராஜிநாமாவும் 'டிஸ்மிஸ'லும் சாத்தியம். முன்னது மந்திரிகளுடைய இஷ்டப்படிச் செய்வது; பின்னது கவர்னர்கள் இஷ்டப்படி நடப்பது. மந்திரிகள் ராஜிநாமாச் செய்துவிட வேண்டுமென்று நினைக்கும்படி செய்யவும் அதன் மூலம் பொறுப்பை அவர்கள் தலையில் சுமத்திவிடவும் கவர்னருக்குக் கொடுத்திருக்கும் சுதந்திரமானது இடம் கொடுக்கவில்லை.

எந்த வகுப்பினர் அல்லது கோஷ்டியினரைப்பற்றி விசேஷப் பொறுப்புகள் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதோ அந்தக் கோஷ்டியினராவது பிரதேசமாவது தங்களுடைய உரிமைகள் பறிகொடுக்கப்பட்டுவிடுமென்று நினைப்பதற்குச் சிறிதும் இடமில்லாமற் செய்ய வேண்டுமென்பதே என் கவலை. தனிப்பட்ட கவர்னர்கள் சம்பந்தப்பட்ட வரையில் நான் பூரண நம்பிக்கையுடனும் பூரண அதிகாரத்துடனும் இந்த உறுதிமொழியைக் கூறுகிறேன்.

#### ராஜிநாமா விஷயம்

மந்திரிகளுக்கும் கவர்னருக்கும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டபோது மந்திரிகளை டிஸ்மிஸ் செய்யும் விஷயமாகவோ ராஜிநாமா செய்யும்படி சொல்லும் விஷயமாகவோ ஒரு சம்பிரதாயத்தை வற்புறுத்துவது சில சமயங்களில் உசிதமாகவிராது. இந்தச் சம்பிரதாயத்துக்கு ஏற்பட்டுள்ள ஆக்ஷேபத்தைப்பற்றி இப்போது நான் வற்புறுத்த விரும்பவில்லை. ஒவ்வொரு சமயத்தில் அற்ப அபிப்பிராய பேதங்களுக்கெல்லாம் கவர்னர் மந்திரிகளை டிஸ்மிஸ் செய்வதென்றாலும் மந்திரிகளாக ராஜிநாமாச் செய்துவிட்டுப் போவதென்றாலும் கஷ்டமாகவேயிருக்கும். இதனால் நிர்வாகத்திலேற்படும் தடையும் மந்திரிகளின் மதிப்புக்குறைவும் அதிகமாகவிருக்கும். மந்திரிகள் தங்கள் அபிப்பிராயத்துக்கு விரோதமாகவோ தங்கள் பொறுப்பில்லாமலோ நடைபெறும் காரியங்களுக்கு ராஜிநாமாச் செய்யும்படி ஏற்பட்டு விட்டால் அவர்கள் கவர்னர் தமது இஷ்டப்படி நடந்துகொண்டார் என்றும் தங்களுக்கும் அக்காரியத்துக்கும் சம்பந்தமில்லை யென்றும் பிரசுரப்படுத்தவும் இடமேற்படும். இவ்விதம் கண்டிப்பான ஒரு சம்பிரதாயத்தை வைத்துக்கொண்டால் காரியசாதகமாகாது. பரஸ்பரம் விட்டுக்கொடுத்து நடந்தால்தான் ஜனநாயக அரசியலை நன்கு நடத்தமுடியும். ஆனல், முக்கியமான ஒரு விஷயத்தைப்பற்றி கவர்னர் அவரிஷ்டப்படி ஒரு முடிவுக்கு வந்துவிட்டால் அந்நிலையில் அவர்கள் தங்களின் பார்லிமெண்டரி அந்தஸ்துக்குக் குந்தகம் நேர்ந்து விட்டதாகச் சொல்லி நிருவாக விஷயத்தில் கவர்னரோடு ஒத்துழைக்க இயலாது எனத் திட்டமாகச் சொல்லிவிட்டு ராஜிநாமா செய்துவிடலாம். அவர்கள் ராஜிநாமா செய்யா விட்டால் கவர்னர் அவர்களோடு ஒத்துழைப்பது நாட்டின் நன்மைக்கு ஏற்றதல்லவென மனப்பூர்வமாக நினைத்தால் அவர் அவர்களை விலக்கிவிடலாம். ஆனல் கவர்னரும் சரி மந்திரிகளும் சரி இவ்வித நிலைமை ஏற்படவேண்டுமென்று எண்ணமாட்டார்கள் என்றே நினைக்கிறேன். ஆபத்துக்கு உதவுவதற்காக மந்திரிகளை விலக்க ஒரு இடம் சட்டத்தில் வைத்திருந்தால் அதை அனுஷ்டானத்துக்கு கொண்டு வருவார்கள் என்று நினைப்பதற்கேயில்லை. இந்நாட்டின் அரசியல் அபிவிருத்தியில் கருத்துடையவர்கள் எவரும் அவ்வித ஆபத்து நிலைமைக்கான சந்தர்ப்பம் அனுஷ்டானத்துக்கு வரவேண்டுமென நினைக்கவே மாட்டார்கள்.

#### பார்லிமெண்டு நோக்கம்

பொதுவாக இந்தியாவின் நன்மையையும் குறிப்பாக அந்தந்த மாகாணத்தின் நன்மையையும் கருதித் தெரிந்தெடுக்கப்பட்ட ஜனப்பிரதி நிதிகளோடு ஒத்துழைக்கவே பார்லிமெண்டு இந்தியா கவர்ன்மெண்டு நிர்வாகிகளாகிய நாங்களும் அரசியல் திட்டத்தை அனுஷ்டானத்துக்குக் கொண்டு வரவிரும்பும் மற்றவர்களும் விரும்புகிறோம். இந்தியா மந்திரி கவர்னர் ஜெனரல் மாகாண கவர்னர்கள் ஆகிய யாவரும் ஒருமுகமாக இவ்வித நிலைமை ஏற்பட முயலுவதையே தங்கள் கடமையாகக் கொண்டிருக்கிறார்கள். புதிய அரசியல் திட்டம் பரிபூரண சுயாட்சியைக் கொடுக்கவில்லையென உங்களில் பலர் பலமாக உணருகிறீர்களென்பதை நான் அறிவேன். அவ்வாறு அவர்கள் உண்மையாகவே கருதுகிறார்களென்பதிலும் எனக்குச் சந்தேகமில்லை. இந்தியாவின் நன்மையையே கருதி, அதற்கு தாங்கள் என்ன செய்யலாமென்று ஆலோசித்தே ஒவ்வொரு பொறுப்பு வாய்ந்த இந்தியனும் இவ்விஷயத்தில் தன் மனப்பான்மையை ஏற்படுத்திக்கொள்ளுகிறான் என்பதும் நிச்சயம். எல்லோருக்கும் நல்லெண்ணம் மாத்திரமிருந்தால் இந்தத் திட்டம் சீராக நடைபெறுமென்பதுதான் என்னுடைய தீர்மானமான அபிப்பிராயம். அநுபவத்தில் இது உண்மையென்பது தெரியவரும். இப்போது அத்திட்டம் சட்டமாகவிருக்கிறது. எத்தனை தான் அதைக் கண்டித்தாலும் அதுவொன்றே நாட்டின் முன்னிருக்கும் பூர்த்தியான திட்டம். உங்கள் லக்ஷியமான பரிபூர்ண சுயாட்சி முறை கிடைக்கவேண்டுமானல் இந்தத் திட்டத்தை ஏற்று நடத்துவதுதான் நேரான சுருக்கமான வழி. அரசியல் என்பது அடிக்கடி மாறும். திட்டத்தில் கண்டுள்ள பதங்களால் அம்மாறுதல்கள் ஏற்படாமல் திட்டம் கெட்டித்து நிலைத்துப்போமென்று கருதுவது அறிவீனம். பொது ஜனங்களுக்கு விசேஷ நன்மையைச் செய்ய இவ்வரசியல் திட்டம் இடம் கொடுக்கிறது.

#### கிராம நலம்

இந்தத் திட்டத்தை யேற்றுப் பூர்த்தியாக நடத்துவதன்மூலம் தான் கிராமங்களும கிராமவாசிகளும் நமது லக்ஷியத்திற்கேற்ப செழிப்படைய முடியும்.

இந்தியாவுக்கு எதிர் காலத்தில் நன்மை பயக்கக்கூடிய பெரியதொரு தீர்மானத்தை நீங்கள் இப்போது செய்தாக வேண்டும். தலைவர்களும் அவர்களைப் பின்பற்றும் ஊழியர்களும் ஆக்க வேலை மார்க்கத்தையே பின்பற்றுவார்களென்று எதிர்பார்க்கிறேன். என்ன நேர்ந்தபோதிலும், எவ்வளவு ஏமாற்றம் வந்தாலும், இந்தியாவில் பார்லிமெண்டரி ஆட்சி முறை ஏற்படுவதற்கு நான் சலியாமல் முயற்சிசெய்வேன். ஆனல் இப்போதைய நிலைமை திருப்திகரமாக முடிவுறாமல் பார்லிமெண்டரி பொறுப்பாட்சி முறை பல மாகாணங்களில் நிறுத்தி வைக்கப்பட்டு விடுமானல், அந்த நிலையை நாம் சீக்கிரத்தில் மாற்றிவிட முடியாது போகும். எவ்வளவுதான் அதற்காக வருந்தியும் பயனில்லை. அநாவசியமாகக் காலம் வியர்த்தமாகும். படிப்படியாக முன்னேற வேண்டிய சீர்திருத்தமும் தடைப்படும். இந்த துக்ககரமானவிஷயங்கள் நேருமென நாம் நம்பவில்லை. உங்களிடமும் இந்தியாவின் நற்கதியிலும் எனக்கு நம்பிக்கையுண்டு.

நாம் செல்லும் மார்க்கம் சில சமயங்களில் இருட்டாகவும், காடு முரடாகவுமிருக்கலாம். நமக்கு வழிகாட்டும் நக்ஷத்திரம் அணைந்து விடும்போலவும் காணலாம், ஆனல் நம்பிக்கையும் தைரியமும் பெரிய சக்திகள். அவற்றின் உதவிகொண்டு நமது லக்ஷியத்தைப்பெற முன்னேறிச் செல்லுவோமாக!









# இந்தியர் ரப்பர்த்தோட்டம் 2 லட்சம் ஏக்கர்

## செட்டியார்களிடம் பெரும்பகுதி இருக்கிறது

## பெரும் எஸ்டேட்டுகளாக்கிஞல் லாபமுண்டு

## பினங்கு செட்டியார் சங்கத் தலைவர் உரை

பினங்கு நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்கத்தின் மூன்றாவது ஆண்டு நிறைவுவிழாப் பொதுக்கூட்டம் ஈசுவர வருடம் வைகாசி மாதம் 18உ (31-5-1937) திங்கட்கிழமை பிற்பகல் 4 மணிக்கு சங்கக் கட்டிடத்தில் சங்கத் தலைவர் திரு. அ. மு. க. வெங்கிடாசலஞ் செட்டியார் தலைமையில் ஆரம்பிக்கப்பெற்றது. அவர்கள் தலைமைப் பேருரையாகப் பேசியதன் சாரம்:—

பினங்கு செட்டில்மெண்டிலுள்ள நம்மவர்களால் ஆரம்பிக்கப்பெற்ற நமது வர்த்தக சங்கத்தின் மூன்றாவது ஆண்டு மே மாதம் 25உயோடு முடிவடைகிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ரப்பர்கட்டுப்பாடு ஆரம்பித்து மூன்று வருடமாகிறது. ரப்பரின் எதிர்கால நிலைமையை நோக்கி அவ்வப்போது சர்வதேச கமிட்டியார் ரப்பர் உற்பத்தியாளர்களுக்கும், அதை உபயோகிப்பவர்களுக்கும் சாதகமான முறையில் கட்டுப்பாட்டை வெற்றிகரமாக நடத்திவருவது மிகவும் போற்றத்தக்கதே. 1938-வது வருட கடைசியில் கட்டுப்பாடானது முடிவடைகின்றது. கட்டுப்பாடு நடத்திக்காட்டிய சென்ற மூன்று வருடங்களும் கட்டுப்பாடு தேசங்கள் புதிதாக ரப்பர் உற்பத்தி செய்யவில்லை.

சென்ற கொஞ்சகாலத்திற்கு முன்னல் லார்டு ஆக்ஸ்போர்ட் தெரிவித்தபடி ரப்பர் தொழிலானது சிறுபான்மையான தொழில் அல்லவென்றும் இந்த தொழில் பெரும் தொழில் என்றும் அறிவித்தார். அது மிகவும் உண்மை. ரப்பர் தொழிலில் பிரிட்டிஷ் தேசத்தவர்களால் மறைமுகமாகவும், நேர்முகமாகவும் 400 மில்லியன் ஸ்டார்லிங் வரையில் மூலதனம் போடப்பட்டு இருக்கின்றது. அதில் மலாயாவில் பிரிட்டிஷ் தேசத்தவர்களால் 120 மில்லியன் ஸ்டார்லிங் வரையில் போடப்பட்டு இருக்கிறது என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். உலகத்தில் 80 லட்சம் ஏக்கர்கள் ரப்பர் தோட்டங்கள் இருக்கின்றன. அதில் மலாயாவில் பிரிட்டிஷ்காரர்களுக்கு 20 லட்சமும், ஆசியா தேசத்தவர்களுக்கு 12 லட்சம் இருக்கின்றது. ஆக மலாயாவிலுள்ள 32 லட்ச ஏக்கரில் இரண்டு லட்சம் ஏக்கர்கள் இந்தியர்களுக்கு சொந்தமாக இருக்கின்றது. அந்த 2 லட்ச ஏக்கரில் நம்மவர்களுக்குத் தான் பெரும்பான்மையும் சொந்தமாக இருக்கின்றது.

இக் கட்டுப்பாட்டினுல் இன்னொரு முக்கிய விஷயத்தைக் கவனிக்க வேண்டியவர்களாக இருக்கின்றோம். சென்ற 2 வருடங்களுக்குள் ரப்பர் விலையில் உயர்வு ஏற்பட்டது கண்டு சிறுபான்மையான தோட்டங்களெல்லாம் சேகரமாக வாங்கப்பட்டு பெரும் எஸ்டேட்களாக அமைக்கப்படுகின்றது. இதனுல் கொஞ்சகாலத்திற்குள் சிறுபான்மைத் தோட்டக்காரர்கள் கையில் இருக்கும் தோட்டங்களெல்லாம் அன்னியர்கள்கையில் சேகரமாக வாங்கப்பட்டு பெரும் எஸ்டேட்டுகளாக அமையும் என்பதில் சற்றும் ஐயமில்லை. ஆகையினுல் நாமும் சிறுபான்மையான தோட்டங்களை எல்லாம் சேகரமாக சேர்த்துப் பெரும் எஸ்டேட்டுகளாக்கி நடத்தினுல் பெருத்த நன்மையும் லாபமும் உண்டாகும். மற்றொரு விஷயத்தையும் உங்கள் பார்வைக்குக் கொண்டுவர வேண்டியிருக்கின்றது. ஐரோப்பியர் தோட்டங்களுக்குக் கொடுக்கும் கூப்பன்களைவிட ஆசியா தோட்டக்காரர்களுக்கு குறைவாக கொடுக்கப்படுகின்றது. இதற்குக் காரணம் நம் தோட்டங்களை நவீன முறையில் பாதுகாத்து வரவில்லை யென்பதே. இது மிகவும் உண்மையான விஷயம். தற்கால ரப்பர் தொழிலானது நவீன ஆராய்ச்சியின் மூலம் உயர்ந்த மேம்பாட்டை அடைந்திருக்கிறது. உதாரணமாக ஒட்டுக்கன்றுகள் உடைய தோட்டங்களுக்கு ஏக்கர் ஒன்றுக்கு 1200 பவுண்டு வீதம் வரையில் கூப்பன் கொடுக்கப்படுகின்றது. இது விஷயத்தில் நாமும் தற்கால முறையில் தோட்டங்களை பரிபாலித்து வந்தால் அதிக லாபம் உண்டாகுமென்பதை அறிவித்துக் கொள்ளுகிறேன். எதிர்காலத்தில் கட்டுப்பாடு முடிந்தவுடன் மறுபடியும் புதுப்பிக்கப்படுமோ என்பதை கவனிக்கவேண்டியவர்களாக இருக்கின்றோம். தற்பொழுது ரப்பர் உற்பத்தி 17 லட்சம் டன்கள் என தெரியவருகின்றது. அதில் 1938-ம் வருடத்து தேவை 12 லட்சம் டன்கள் என கணக்கிடப்பெற்றிருக்கிறது. இதனுல் 5 லட்சம் டன் உற்பத்தி செய்ய மார்க்கம் இருந்தும் கட்டுப்பாட்டின்படி தேவையில்லை என்றும் தெரிகின்றபடியால் கட்டுப்பாட்டை வெற்றிகரமாக நடத்திக் காட்டவேண்டிய தன்மை சர்வதேச கமிட்டியாரிடம் இருக்கின்றது. ஆகையினுல் நம் சங்கமும் நன்கு கவனித்து கட்டுப்பாட்டை மறுபடியும் புதுப்பிக்கவேண்டிய நடவடிக்கைகளை அடுத்த ஆண்டில் கவனிக்க வேண்டும் என்பதை அறிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக ஈயத்தைப்பற்றி கவனிப்போம். சென்ற ஐந்து ஆண்டுகளாக நடந்துவந்த ஈயக்கட்டுப்பாடு மறுபடியும் ஐந்து வருடத்திற்கு புதுப்பிக்கப்பட்டு இருக்கின்றது. மறுபடியும் ஈயக்கட்டுப்பாட்டை புதுப்பிப்பதற்கு சயாம் தேசத்தவர்கள் ஒத்துக்கொள்ளவில்லை, ஆனல் சர்வதேச ஈயக் கமிட்டியாரின் பரந்த நோக்கமும், பெலிவீயாவின் தாரான தன்மையும் கட்டுப்பாட்டை புதுப்பிப்பதற்குக் காரணம் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஈயத்தின் எதிர்காலம் மிகுந்த ஊக்கத்தையே கொடுக்கின்றது. அதனுல் ஈய விலையில் உயர்வு காணப்படுகின்றது. ஈயப்பங்குகளுக்கும் அதிக கிராக்கி இருந்து வருகின்றது.

கொப்பரா சென்ற வருடத்தில் அதிக லாபகரமாகவே வந்தது. இதற்கு காரணம் இந்நாட்டில் தேங்காயின் உபயோகம் உள்நாட்டிலேயே அதிகரித்ததும் அல்லாமல் ஜெர்மனியும், அமெரிக்காவும் அதிகம் வாங்கினதுமே. தற்பொழுது இருந்துவரும் விலை கொப்பரு தொழிலுக்கு சாதகமாகவே இருந்துவருகிறது.

மற்ற வியாபாரங்களில் மலாய்நாட்டிலிருந்து ஏற்றுமதியான சரக்குகளின் விலையில் உயர்வு காணப்பட்டது. ஐரோப்பாவின் ராஜீய குழப்பங்களினுல் அந்தந்த நாடுகள் ஆயுதபலங்களை அதிகரித்ததினுல் இரும்பு, ஈஃகு இவைகளின் விலையில் அதிக உயர்வு காணப்பட்டது.

நாணய மார்க்கட்டை நோக்கினுல் பணம் சுலபமாகவே இருந்து வருகின்றது 3 பர்சண்டுக்கு தாராளமாகவே கடன் வாங்கப்பட்டு வருகின்றது. சென்ற 2 மாதங்களுக்கு முன்னல் பினங்கு முனிசிபாலிடி 3 மில்லியன் வெகு சுலபமாகவே கடன் வாங்கிற்று. ஆகையினுல் நம்மவர்கள் இந்நாட்டிலுள்ள தொழில்களிலும், வியாபாரங்களிலும் பெரும் மூலதனங்கள் போட்டு பல்வேறு தொழில்கள் நடத்தினுல் அதிக லாபங்கள் கிடைக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இவ்வருடத்தில் நம் சங்கம், இந்நாட்டில் இந்தியர்களுக்கு உள்ள பெருங்குறையைநீக்கக்கூடியதான பாங்கு ஒன்று இந்நாட்டில் அமையவேண்டும் என்றும் அதற்கான ஏற்பாடுகள் நம் சங்கத்து நிர்வாக சபையாரால் நன்கு கவனிக்கப்பெற்று நம் சங்கத்தின் தீர்மானத்தையே அடிகோலியாகக்கொண்டு சென்னையிலுள்ள சில பிரபலஸ்தர்கள் முயற்சியின்பேரில் இந்தியன் ஓவர்சீஸ் பாங்என்ற பெயருடன் ஆரம்பிக்கப்பெற்று அதின் கிளை ஸ்தாபனம் பினங்கில் இன்னும் ஒரு மாதத்திற்குள் திறக்கவேண்டியதற்கு உள்ள ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றது. அந்த பாங்கை நம்மவர்கள் ஆதரிக்க பெரிதும் கடமைப்பட்டுள்ளோம் என்பதை அறிவித்துக் கொள்ளுகிறேன்.

நம் சங்கத்தின் சார்பாக பொது ஸ்தாபனங்களில் பிரதிநிதித்துவம் வழங்கப்பெற வேண்டும் என்ற பிரச்னை சம்பந்தமாக நாம் தீவிரமாக பாடுபட வேண்டியவர்களாக இருக்கின்றோம். இது விஷயத்தை இந்நாட்டிற்கு இந்தியா கவர்ன்மெண்ட் தூது கோஷ்டியாக வந்த கனம் வி. எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரியாரிடம் சமர்ப்பித்த நம் சங்கத்து அறிக்கையில் தெளிவுபட எடுத்துக்காட்டினேம். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அடுத்த ஆண்டு நிர்வாக சபையார் ஒரு மகஜர் தயார் செய்து கவர்னரைப் பேட்டிகண்டு வேண்டுவன செய்யும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

காரியதரிசி அவர்கள் சங்கம் மூன்றாவது ஆண்டில் நமது சங்க வாயிலாக ஆற்றிய தொண்டுகளைக் குறிக்கப்பெற்றிருந்த அறிக்கையும், வரவு செலவு கணக்குகளும் வாசிக்கப்பெற்று சபையோரால் அங்கீகரிக்கப்பெற்றன.

சங்கத்தின் நான்காவது வருடத்திற்கு (1937-38) கீழ்க்கண்ட உத்தியோகஸ்தர்களும் நிர்வாகசபை அங்கத்தினர்களும் கொண்ட நிர்வாக சபையார் தேர்ந்தெடுக்கப்பெற்றார்கள்.

தலைவர்:—திரு. க. அள. ராம. அருணசலம் செட்டியார், உப தலைவர்:— திரு. க. வெ. ராம. அழகப்ப செட்டியார், காரியதரிசி:—திரு. க. வீ. அள. மு. சுப்பிரமணியன் செட்டியார், உதவிக் காரியதரிசி:—திரு. ஆவி. பள. சொக்கலிங்கம் செட்டியார், பொக்கிஷதார்:—திரு. சா. கா. அ. அள. சித. லெட்சுமணன் செட்டியார், கணக்குப் பரிசோதகர்:—திரு. சா. கா. ராம. கா. அருணசலம் செட்டியார், 15 நிர்வாக சபை மெம்பர்கள் தேர்ந்தெடுக்கப்பெற்றனர்.

## ஸ்தலஸ்தாபனத் தேர்தல்கள்

### ஜில்லா, நகரக் கமிட்டிகளின் உரிமைகள்

சென்னை, ஜன், 17உ

ஜில்லா போர்டுகள், முனிஸிபாலிடிகள் முதலியவற்றின் தேர்தல்களை நடத்துவதற்காகத் தமிழ்நாடு காங்கிரஸ் காரியக் கமிட்டி நியமித்த சப் கமிட்டியின் கூட்டம் இன்று காலை சென்னைக் காங்கிரஸ் மாளிகையில் நடைபெற்றது. தேர்தல்கள் சம்பந்தமாகப் பின்கண்ட விதிகள் அங்கீகரிக்கப்பட்டன.

ஜில்லா, நகரக் காங்கிரஸ் கமிட்டிகளைக் கலந்துகொண்டே முறையே ஜில்லா போர்டு, நகரசபைத் தேர்தல்களில் காங்கிரஸ் தலையிடும். பஞ்சாயத்து போர்டு தேர்தல்களில் போட்டியிடு முன்பு ஜில்லா காங்கிரஸ் கமிட்டி, சப் கமிட்டியின் அங்கீகாரத்தைப் பெற வேண்டும்.

காரியக் கமிட்டியிலிருந்து ஒரிருவரும், ஜில்லாக் கமிட்டியிலிருந்து ஒரிருவருமாக 9 பேருக்கு மேற்படாதவர்களடங்கிய அட்ஹாக் கமிட்டியார் ஜில்லா அல்லது நகர காங்கிரஸ் கமிட்டியைக் கலந்துகொண்டு தேர்தல்களில் நிற்க விரும்புவோரிடமிருந்து மனுக்களை வாங்கி சப் கமிட்டியின் அங்கீகாரத்திற்குட்பட்டு அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்கலாம். ஜில்லா முழுமைக்குமோ, நகர்வாரியாகவோ அட்ஹாக் கமிட்டி நியமிக்கப்படலாம். இவை தேர்தல் முடிந்தபின் சப் கமிட்டிகளுக்குக் கணக்கை யனுப்பும். இவை சிறு சப் கமிட்டிகளை அமைக்கலாம். நியமனச் சீட்டுத் தாக்கல் செய்யப்படுவதற்கு 25 தினங்களுக்கு முன்பாக அட்ஹாக் கமிட்டியார் தங்கள் சிபார்சுகளையனுப்ப வேண்டும். ஜில்லா அல்லது நகரக் காங்கிரஸ் கமிட்டிக்கும் அபிப்பிராயபேதமேற்பட்டால் சப் கமிட்டியார் ஆலோசனைக்கு அவ்விஷயத்தை அனுப்பவேண்டும்.

நாமினேஷன் தேதிக்குச் சுமார் 3 மாதங்களுக்கு முன்பாக ஒருமாத சாவகாசம் கொடுத்து அட்ஹாக் கமிட்டியார் அபேட்சகர் மனுக்களைக் கோர வேண்டும். நாமினேஷனுக்குச் சுமார் 15 நாட்களுக்கு முன்பாக அபேட்சகர்களின் பெயர்கள் அறிவிக்கப்பட வேண்டும். அபேட்சகர்களாக நிற்க விரும்புவோர் தங்கள் மனு, உறுதிமொழிப் பத்திரம் முதலியவற்றோடு ரூ. 10ம் அனுப்பவேண்டும். இப்பணம் திருப்பிக் கொடுக்கப்பட மாட்டாது. அபேட்சகர் ஜாபிதா வெளியானதும் 1-வாரத்தில் ஜில்லா போர்டு அபேட்சகர்கள் ரூ. 100ம், நகரசபை அபேட்சகர்கள் ரூ. 50ம் அட்ஹாக் கமிட்டி கன்வீனரிடம் செலுத்தி விட வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் சப் கமிட்டியார் அந்தஸ்தானத்துக்கு இன்னொருவரைத் தேர்ந்தெடுக்கலாம். அபேட்சகர்களின் பெயர்கள் வெளியாகு முன்பு தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்குச் சேரவேண்டியதான பத்து ரூ. அனுப்பப் பெறுதல் வேண்டும்.

ஜில்லாபோர்டு, நகரசபைத் தேர்தல்களில் போட்டியிடுவது பற்றி ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் அபிப்பிராயம் சுற்றறிக்கை மூலம் தெரிந்து விடுதல் வேண்டும்.

மனுப் போடுவதற்கு 3 மாதங்களுக்கு முன்பு முதலாவது காங்கிரஸ் அங்கத்தினர்களாக இருந்தவர்களே அபேட்சகர்களாக இருக்கலாம். அவர்கள் வழக்கமாய்க் கதர் உடுத்துபவராய் இருத்தல் வேண்டும்.

---

### உலக குஸ்தி வீரர் காமா

திருவனந்தபுரம் விஜயம்

உலக குஸ்தி வீரரான காமா அடுத்த மாத மத்தியில் திருவனந்தபுரத்திற்கு விஜயம் செய்வாரென்று தெரிகிறது.



## நீக்ரோவுக்கு 75 வருஷ தண்டனை

மாண்ட்கோமரி, ஜுன், 15உ

சில வெள்ளைக்காரிகளைத் தாக்கியதாக ஒன்பது நீக்ரோக்கள் குற்றஞ்சாட்டப்பெற்று கீழ்க் கோர்ட்டாரால் மாண தண்டனை விதிக்கப்பட்டிருந்தனர். அப்பீலில் அவர்களில் ஒருவரான ஹேவுட் பாட்டர்சனுக்கு மாண தண்டனைக்குப் பதிலாக 75 வருஷ சிறைவாச தண்டனை விதிக்கப்பட்டது. சுப்ரீம் கோர்ட்டாரும் அத்தண்டனை உறுதிப்படுத்திவிட்டனர்.

இதே காரியத்தை நீக்ரோ பெண்களிடம் ஒரு வெள்ளையன் செய்திருந்தால் பேனு இவ்வளவு தீவிரமாக தண்டனையை விதிக்குமென்று நினைக்கிறீர்கள்? நிச்சயமாக இல்லை! இது வெள்ளைத் தோல்! அது கறுப்புத் தோல் அல்லவா?

---

### குருக்களின் தெய்வபக்தி

அம்மன் தாலி அபேஸ்!

கொள்ளிடம் நதிக்கு மேற்றிசையில் ஓமாப்புலியூர் என்னும் கிராமத்தில் அவ்வூர் சிவன் கோவிலைச் சேர்ந்த ஸ்ரீ புஷ்பவல்லியம்மன் கழுத்திலிருந்த திருமாங்கல்யத்தை குருக்கள் அறுத்துக்கொண்டு போய்விட்டார். அவரைப் போலீசார் கைதி செய்திருக்கின்றனர். தன்னைப்போன்ற இளம் பெண்களின் தாலியெல்லாம் அறுபடுவதை இந்த அம்மன் பார்த்துக்கொண்டிருக்கிறதல்லவா! அதற்கு இது பதில் போதும்!

---

### விவசாயிகளுக்கு உதவி

புதுக்கோட்டை சமஸ்தான முயற்சி

பருத்தி, கரும்பு, போன்ற குறைந்த செலவில் உற்பத்தி செய்யக்கூடிய பயிர்களைச் சிறந்த முறையில் விவசாயிகள் சாகுபடி செய்ய புதுக்கோட்டை சர்க்கார் தேர்ந்த பருத்தி விதைகளையும் இலவசமாக அளிக்க உத்தேசித்துள்ளார்கள்.

பருத்திவிதைக்கும் உசிதகால முறைக்கு ஆதரவு காண்பித்து விவசாயிகளைத் தூண்ட தகுதிவாய்ந்த விவசாயிகளுக்கு மத்யகால சாகுபடிச் செலவுகளை சர்க்கார் கொடுத்துதவ உத்தேசித்திருக்கிறார்கள்.

சமஸ்தானத்தில் கறவை மாடுகளை அபிவிருத்திசெய்ய வசதியளிக்க விவசாயப் பண்ணையில் நல்ல பொலி காளைகள் இருக்கும்படி ஏற்பாடு செய்யத் தீர்மானித்துள்ளார்கள்.

இரண்டு விந்து பொலிகாளைகளுக்கும், ஐந்து சிந்து பசுக்களுக்கும், ஒரு டில்லி எருதுக்கும் சமஸ்தான சர்க்கார் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

---

### இந்தியாவின் கல்வி நிலை தாழ்ந்திருப்பதேன்?

இந்தியாவில் கல்வி நிலையானது இவ்வளவு தாழ்ந்த நிலையிலிருப்பதற்குக் காரணம் அவர்களுடைய அறியாமையினாலல்ல. உலகத்திலுள்ள மக்கள் யாவரினும், இந்தியர்கள் புத்திசாலிதான் என்றும், விரைவில் படித்துக்கொள்ளக்கூடிய சக்தி அவர்களிடம் உண்டென்றும் நான் கருதுகிறேன். அவர்களுடைய கல்வியறிவு வளராமைக்கு இந்தியாவில் ஏராளமான தடைகள் இருக்கின்றன" என்று நியூயார்க்கிலுள்ள அகில உலகக் கல்விக் கமிட்டியின் காரியதரிசி டாக்டர் ப்ரான்க், வி. லாயிக் PL. D. கூறுகிறார்.

முதல் தடை ஒரு இந்தியன் கல்வி கற்க விரும்பினால் அவன் அன்னிய பாஷை படிக்கும்படி வற்புறுத்தப்படுகிறான். மற்றும் பெற்றோர்கள் கல்வியறிவற்றவர்களாகவிருப்பதால் குழந்தைகள் பள்ளிகளில் படித்து வீட்டுக்கு வந்ததும் மறந்துவிடுகின்றனர். வயதுவந்த பெற்றோர்கள் நன்கு கல்வி கற்றிருப்பின் குழந்தைகள் மறப்பதற்கு இடமிராது. மூன்றாவது ஆரம்பக் கல்வி கற்கும் வயது வந்தவர்களுக்கு அவர்களின் வயதுக்கேற்ற புஸ்தகங்கள் இடையாது. மேலும் புஸ்தகங்கள், பத்திரிகைகள் முதலியவற்றில் வழக்கத்திலுள்ள பாஷை எழுதப்படுவதில்லை.



## ரஷ்யச் செய்திகள்

### 'பெண்கள் முன்னேற்றத்தின் புகலிடம்

ரஷ்யாவில் நகர ஜனத்தொகை அதிவேகமாக அபிவிருத்தியடைந்துவருகிறது. வாசஸ்தல வசதிகளைப் போதிய அளவு செய்துகொடுத்தலே கஷ்டமாகிவிட்டது. ஜனத்தொகைப் பெருக்கம் 30 வருஷங்களில் எப்படியிருக்குமென்று மதிப்பிட்டு அதற்கான ஏற்பாடுகளை சர்க்கார் செய்துவருகின்றனர்.

* * *

சமூக இன்ஷ்யூரன்ஸ் நிதி மூலம் வரும் பணத்திலிருந்து தொழிலாளருக்கு ஓய்விடங்கள், சுகாதார வாசஸ்தலங்கள் முதலியவை அமைக்கப்படுகின்றன.

* * *

முன்பு ஜாருக்குச் சொந்தமாக இருந்த பல மாளிகைகளும் கட்டிடங்களும் சுகாதார வாசஸ்தலங்களும் இக்காரியங்களுக்காக உபயோகிக்கப்படுகின்றன. மொத்தம் 311 ஓய்விடங்கள் உள. இவற்றில் 73,000 பேர் வசிக்கலாம். சுகாதார வாசஸ்தலங்கள் 78 உள. இரவு நேரத்தைக் கழிப்பதற்காகத் தனி சுகாதார ஸ்தலங்களிருக்கின்றன. நோயுற்ற குழந்தைகளோ, ஒரு க்ஷய ரோகியோ மற்றவர்கள் தூக்கத்திற்கு இடைஞ்சல் உண்டுபண்ணக்கூடுமெனத் தோன்றினால் மேற்கண்ட சுகாதார வாசஸ்தலத்திற்கு அனுப்பிவிடலாம்.

* * *

தொழிற்சாலைகளில் வேலை செய்வோர் ஏதாவது விபத்துக்களால் சிக்கி இறந்துவிட்டால் அவர்களைச் சேர்ந்தவர்களுக்கு ஈடு செய்யப்படுகிறது.

* * *

பொருளாதாரத் தடைகளிலிருந்து மாதர் விடுதலையடையாவிட்டால் தொழிலாளரைக்கம் வெற்றிபெறுவது கஷ்டமென்று 1866-ம் வருஷத்திலேயே கார்ல்மார்க்ஸ் கூறினர். 1917-ம் வருஷம் வரையில் ருஷ்ய மாதர் தாழ்ந்த நிலையிலேயே இருந்தனர். இப்பொழுது அவர்கள் நிலை அபிவிருத்தியடைந்துவிட்டது. ஆடவரும் பெண்டிரும் சமத்வமென்ற கொள்கையைக் கொண்டே சட்டங்கள் செய்யப்பட்டன. ஓட்டுரிமை, பதவி விநியோகம், முதலியவற்றிலும் சம்பளங்களிலும் இருபாலாரும் சமத்வமாகவே மதிக்கப்படுகின்றனர். கல்யாணமானதாலாவது ஆகாததாலாவது ஸ்திரீகள் அந்தஸ்து மாறிவிடாது.

* * *

ஸ்திரீகள் உள்பட இன்றைய ருஷிய ஜனத்தொகையில் 100-ல் 90 பேருக்கு எழுதப்படிக்கத் தெரியும். பள்ளியாசிரியர்களில் 3-ல் இரண்டு பங்கு ஸ்திரீகளாயிருப்பதே இதற்குக் காரணம். டாக்டர்களில் பெரும்பாலோரும் ஸ்திரீகள். ஏராளமான பெண்கள் ஆராய்ச்சிசாலைகளில் வேலை செய்கின்றனர். இஞ்சினீரிங் உத்தியோகங்களில் பெரும்பான்மையான ஸ்தானங்களில் பெண்டிர் உளர். இராணுவம் கூட இவ்விதிக்கு விலக்கல்ல. ஒரு ராஜதந்திர பதவியாவது ஸ்திரீக்குக் கொடுக்கப்படுகிறது.

* * *

ருஷ்யாவில் வருஷம் 60 லட்சம் குழந்தைகள் ஜனிக்கின்றன. இத்தனை தாய்மார்களுக்கும் வைத்ய வசதி, ரஜா வசதி, ஆஸ்பத்திரியில் வசிக்க சௌகர்யம், ரஜா காலத்தில் சம்பளம், குழந்தைகளுக்குப் பால் கொடுக்க அவகாசம், குழந்தைகளுக்குக் கிராண்டு முதலியவை எல்லாம் கொடுக்கப்படுகிறது.

* * *

கர்ப்பிணிகள் பாதுகாப்பு ஆஸ்பத்திரியிலிருந்து சீட்டுப்பெற்ற கர்ப்பிணிகள் டிராம் கார்களில் விசேஷ சௌகர்யம் செய்து கொடுக்கப்பெறுகின்றனர். சுலபமான வேலையே கொடுக்கப்படுகிறது. இரண்டு மாத ரஜா, சம்பளத்தோடு பெற அவர்களுக்கு உரிமையுண்டு.

* * *

அவர்கள் உரிமைகளைப் பாதிப்போரை, எதிர்த்துப் போராட வக்கீலின் சகாயம் அவர்களுக்கு எந்த சமயத்திலும் கிடைக்கும். குழந்தை பிறந்தது முதல் அதற்குத் தேவையான ஆகாரம், உடை, படிப்பு முதலிய எல்லாக் காரியங்களையும் ஒரு கமிட்டி கவனிக்கிறது. இவ்வாறு செய்ய வேண்டியது தங்கள் கடமையென்று சர்க்கார் மதிக்கிறார்கள்.

* * *

கர்ப்பத்தடை முறைகளைக் கற்றுக்கொடுப்பதற்காக இலவச ஆஸ்பத்திரிகள் பல இருக்கின்றன. ஆனால் ஹாலந்து, பிரான்ஸ் அமெரிக்கா முதலிய இடங்களிலிருப்பது போல் இங்கு அவ்வளவு பிரபலமாக இல்லை. அடிக்கடி குழந்தைகளைப்பெறும் ஸ்திரீகளுக்குக்குடும்ப சம்ரக்ஷணையில் அதிக சிரத்தையில்லாது போய்விடுமென்று சர்க்கார் கருதினார்கள். தேவையில்லாதபோது கர்ப்பம் வந்துவிட்டால் அதைக் கலைத்துக் கொள்வது குற்றமில்லையென்று 1920ம் வருஷம் சர்க்கார் ஒரு சட்டம் பிறப்பித்திருக்கிறார்கள்.

## டாக்டர் கான் சாகிபின் காதல் நாடகம்

### 'பாஸ்பண்ண வேண்டுமானல் நான் சொல்வதுபோல் நட'

டாக்கா வைத்தியக் கலாசாலையின் டெபுடி சூப்பரிண்டெண்டின் பெயர் டாக்டர் கான்சாஹிப் மஜுத்தீன் கான். அந்த வைத்தியக் கலாசாலைக்கு ஸ்திரீகள் ஹாஸ்டல் ஒன்று தனியாயிருக்கிறது. அந்த ஹாஸ்டல் பெண்களிடம் இந்த டாக்டர் கான் சாஹிப் தகாத விதமாக நடந்து கொள்வதாகப் பல விஷயங்கள் வெளியிடப்படுகின்றன. இவரைப்பற்றி, சிறிது நாட்களுக்கு முன்னரே ஸ்கூலை விட்டுச் சென்றுவிட்ட ஸ்ரீமதி. சுஸ்மா ராய் பின்வருமாறு கூறுகிறார்:—

"நான் உடற்கூறு சாஸ்திரப் பரீட்சையில் தவறிவிட்டேன் என்பதறிந்த டாக்டர் கான்சாஹிப் என்னைக் கூப்பிட்டனுப்பினர். நான் மேட்ரனுடன் அங்கு சென்றேன். நான் டாக்டருடன் பேசிக்கொண்டிருக்கையில் மேட்ரன் என்னைவிட்டு வெளியே போய்விட்டார். நான் பதார்த்த குணப் பரீட்சையில் தேறிவிட்டதாகவும், உடற்கூறு சாஸ்திரத்தில் தான் தேர்ச்சிபெறவில்லையென்றும் ஆனால், அவர் அப் பரீட்சகரிடம் சென்று எனக்குப் பாஸ் மார்க் வாங்கிக் கொடுப்பதாகவும், நான் அதற்குப் பதில் அவர் இச்சைக்கு இணங்கவேண்டுமென்றும், அடிக்கடி அவர் வீட்டிற்கு நான் வரவேண்டுமென்றும் அவர் கூறினர். உபகாரச் சம்பளம் வாங்கித் தருவதாகவும் கூறினர். நான் அவற்றிற்கெல்லாம் இணங்கவில்லை. பயப்பட வேண்டாமென்றும், தாம் டாக்டராயிருப்பதால் எதற்கும் அச்சமில்லையென்றும் கூறினர். நான் எழுந்து ஹாஸ்டலுக்குப் போய்விட்டேன். அதன்பின் அவர் அடிக்கடி தொந்தரை செய்யவே நான் கலாசாலையையே விட்டு வந்துவிட்டேன்."

இந்த டாக்டர் கான் சாஹிப் அந்தக் கலாசாலையை விட்டு சர்ஜன் ஜரைலால் நீக்கப்பட்டார்.

---

### கருந்துழிப் பார்ஸல் கொலை வழக்கு

ராமானுஜத்தின் தாயாருடைய மனு

சீதம்மாள் என்ற ஸ்திரீயைக் கொலை செய்ததாகத் தொடரப்பட்ட வழக்கில் ஆயுள்வரை தண்டிக்கப்பட்ட ராமானுஜம் ஐயங்கார் இப்போது கண்ணனூர் சிறையிலிருக்கிறார். இவ் வழக்கை மீண்டும் விசாரிக்க வேண்டுமென்றும், சீதம்மாளின் பிரேதப் பார்ஸல் கொண்டுவரப்பட்டதாகக் கூறப்படும் மாடிப்படி அப்படிப்பட்ட பார்ஸலைக் கொண்டுவர முடியாததொரு குறுகிய இடமென்றும், எனவே இவ்வழக்கைப் புனர் விசாரணை செய்யவேண்டுமென்றும் ராமானுஜத்தின் தாய் வைஸிராய்க்கும், கவர்னருக்கும் மனுக் கொடுத்திருப்பதாய்த் தெரிகிறது.

## 'நவீன இந்தியாவின் தந்தை',

### ராம் மோகனரின் பிறந்த தினக்கொண்டாட்டம்.

ராம் மோகனரின் பிறந்த தினத்தைக் கொண்டாடுவதற்காக லாகூரில் மேமீ 23-ந் தேதியன்று பெரிய பொதுக் கூட்டமொன்று நடைபெற்றது. மௌல்வி குலாம் மொஹியுதீன் M. L. A. பேசுகையில் நவீன இந்தியாவின் தந்தை என்பது ராமோகனுக்கு இந்தியாவிலுள்ள பிரபல முஸ்லிம்களும இந்துக்களும் வழங்கிய நற்பெயர் என்று அவர் குறிப்பிட்டார். பிரம்ம சமாஜம் என்பது அவரால் இந்தியாவுக்கு அளிக்கப்பட்ட மகத்தான நன்கொடையென்றும், சதியொழிப்புச் சட்டத்தின் மூலம் அவர் இந்தியாவிற்குச் செய்திருக்கும் நன்மை மறக்கமுடியாததென்றும், அரசியல் விஷயங்களிலும் அவர் அக்காலத்தில் தீவிர வாதியாக இருந்தாரென்றும், பத்திரிகா சுதந்திரத்தின் பொருட்டு அவர் 1823ம் வருஷத்திலேயே போராடியிருக்கிறார் என்றும் அவர் குறிப்பிட்டார். சக்தி பத்திரிகையின் ஆசிரியை ஸ்ரீமதி ஷன்னோ தேவி, வோகலி ஆர்யா M. A. Ph. D; ப்ரொபசர் ரூசிராம் சஹானி, R. S. L. ரகுநாத் சஹாய் முதலியவர்கள் ராம் மோகனரின் மகத்தான தொண்டைக் குறித்தும் பேசினர்கள்.

தலைமை வகித்த ஜஸ்டிஸ் பைட் முடிவுரையாகப் பேசுகையில் அவரது உபதேசங்களும் வாழ்க்கையும் இந்தியர்களுக்குக் கலங்கரை விளக்கமாக இருந்ததென்றும் குறிப்பிட்டார்.

---

### இலங்கை வீரசைவ முன்னேற்றச் சங்கம்

(ஒரு நிருபர்)

கண்டி இலங்கை வீரசைவ முன்னேற்றச் சங்கம் கம்பளை திருவாளர் ச. சொக்கலிங்க பண்டாரம் தலைமையின் கீழ் தன்னக்கோம்பரை செல்வ விநாயகர் மண்டபத்தில் 12உ சனிக்கிழமை ஆரம்பமாகி 14உ இரவு 7 மணி வரையில் நடைபெற்றது.

மகாநாட்டிற்கு தலைமை வகித்த திருவாளர் ச. சொக்கலிங்க பண்டாரம் தமது முன்னுரையைக் கூறினர்.

நமது வீரசைவ சமூக மக்கள் அனைவரும் அங்கத்தவர்களாகச் சேர்ந்து இலங்கை வீரசைவ முன்னேற்றச் சங்கம் என்ற பெயருடன் நம் சமூக சங்க ஸ்தாபன மொன்று நிறுவ இம்மகாநாடு தீர்மானிக்கிறதென ஒரு பிரரேபணையை கண்டி திருவாளர் அ. சிதம்பரபண்டாரம் கொண்டுவர கொழும்பு திருவாளர் மு. ச. சிங்காரவேலு பண்டாரம் ஆமோதிக்க திருவாளர் ஆரு. ஆறுமுக பண்டாரத்தால் ஆதரிக்கப்பட்டு தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. அப்பால் சங்கத்திற்கு நிர்வாகஸ்தர்கள் தலைவர், உபதலைவர், காரியதரிசி, உபகாரியதரிசி, காரியக்கமிட்டி 5 பேர்கள், பகுதி மெம்பர்கள் 22 ம் தெரிவு செய்யப்பட்டனர்.

இச்சங்கத்தில் சோகி வகுப்பைச் சேர்ந்த ஆதி சைவர்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று கொழும்பு திருவாளர் மு. ச.சிங்காரவேலு பண்டாரம் கொண்டு வந்த பிரரேபணையை ராஜா தோட்டம் திருவாளர் சித. பழனிவேலு பண்டாரம் எதிர்த்து ஓட்டுக்கு விடப்பட்டதில் பிரரேபணைக்கு சாதகமாக 14 ஓட்டும் பாதகமாக 13 ஓட்டுகளும் கிடைத்தால் ஆதி சைவர்களென்ற சோகி வகுப்பார்களையும் இச்சங்கத்தில் சேர்த்துக்கொள்வதென்ற தீர்மானம் நிறைவேறியது. குருப் போட்டோ எடுக்கப்பட்ட பின்னர் காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறப்பட்டுக் கூட்டம் இனிது கலைந்தது.

## 'ஆண்ட்' மன்னருக்கு நஷ்ட ஈடு

### பெண்களை அந்தப்புரத்தில் சேர்க்கிறாராம்

'ஆண்ட்' ராஜா சாஹிப் அவர்கள் தேகாப்பியாச விஷயங்களிலும், சூரிய நமஸ்கார விஷயங்களிலும் அதிக நம்பிக்கையுடையவர். அவற்றைப்பற்றி அவர் பல கட்டுரைகளும் எழுதவதுண்டு. ஆனால் மேற்கண்ட லண்டன் பத்திரிகை "தம் சமஸ்தானத்திலுள்ள ஸ்திரீகளை ராஜா சாஹிப் ஒவ்வியாகச் செய்து வருகிறாரென்றும், எல்லா ஸ்திரீகளுக்கும் சூரியநமஸ்காரம் பயிற்றுவிக்கப்படுகிறதென்றும், இந்த சூரிய நமஸ்காரம் செய்யும் ஸ்திரீகள் அவருடைய அந்தப்புரத்தில் விசேஷக் கவனிப்புடன் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்களென்றும் ஓர் அவதூறான வியாசத்தை 3-1-37-ந் தேதி வெளியிட்டு விட்டது. அதற்காகவென்று இப்போது அப் பத்திரிகை, ஒரு பகிரங்க மன்னிப்பை ராஜா சாஹிபிடம் சமர்ப்பித்ததுடன், 2000 பவுனையும் நஷ்ட ஈடாக அளித்திருக்கிறது.

---

### பெங்களூர்

பத்தாயிர ரூபா குஸ்தி

உலகப் பிரசித்தி பெற்ற புரொபசர் காமாவின தம்பியுடன் போட்டியாக நின்ற ஈஸ்வர சிங்க 10 ஆயி ரூபா குஸ்திப் பந்தயத்தில் தோல்வியுற்றார்.



## தேவை.

இலங்கையைச் சேர்ந்த கம்பெனியில் உள்ள செட்டியாரின் ரெஸிடென்ஷியல் ஹைஸ்கூலுக்கு நாட்டுக் கோட்டைச் செட்டியார் வகுப்பைச் சேர்ந்தவரும் ஆங்கிலம் நன்ருய்த் தெரிந்தவருமான சூப்பரின்டென்டென்ட் ஒருவர் தேவை.

நாட்டுக்கோட்டைச்செட்டியார் எஜுகேஷனல் டிரஸ்ட் காரியதரிசி வேண்டியும் அவர் பார்க்கவேண்டும். திறமைக்குத்தக்க சம்பளம் கொடுக்கப்படும். விருப்பமுள்ளவர்கள் கீழ்க்கண்ட விலாசத்திற்கு மனுச்செய்து கொள்ளவும்.

M. V. R. Rm. Ramanathan, Chettiar,
Hony. Secretary,
Nattukkottai Chettiar Educational Trust,
Kanbe, Rangoon

